


கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 1
மாசி 13, 2052
**உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால்**
வெளியிடப்படும்
இலவச இணைய இதழ்


## குறள் படிக்கிறேன்!

அம்மா சொன்னபடி - என்
அப்பா சொன்னபடி
குறளைப் படிக்கின்றேன் - திருக்
குறளைப் படிக்கின்றேன்

நாளுக்கு ஒருகுறளை - மனனம்
நான்செய் கின்றேனே
நாற்பது குறளைநான் - இதுவரை
நன்கு பயின்றுவிட்டேன்

தொடர்ந்து படித்திடுவேன் - சோர்வு
துளியும் நான்கொள்ளேன்
எல்லாக்குறள்களுமே - மனத்தில்
இனிதே பதிந்திடுமே!

ஒருமுறை மட்டுமா - இல்லை
ஒருநூறு முறைக்குமேல்
திரும்பத் திரும்பநான் - அருமைத்
திருக்குறள் ஓதிடுவேன்

"நம்திருக் குறளைப்போல் - ஒருநூல்
நானிலம் எங்கும்இல்லை"
அம்மாவும் அப்பாவும் - இதனை
அடிக்கடி கூறிடுவர்

கற்றவர் என்பெற்றோர் - அவர்
கருத்தில் பிழைவருமோ?
பெற்றவர் அவர்சொல்லைப் - போற்றிப்
பேறுகள் பெறுவேனே!

-முரசு நெடுமாறன், மலேசியா



இந்தப் பாடலை இயற்றியவர் மலேசியாவில் புகழ்வாய்ந்த பெரும்பாவலர். குழந்தைகளுக்காகபாடல்கள்,கதைகள்,நாடகங்கள் ஆயிரக்கணக்கில் இயற்றியவர்.

---


*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாச ராவ்*

*இணையாசிரியர்கள் : தி.ஈழக்கதிர், திருமதி.செயசாலினி இரத்தினமேரி, திருமதி.சுபா.அருணாசலம்*


---

# திருவள்ளுவருக்குச் சாதி அடையாளம் கொடுப்பது பொருந்துமா?

சாதி, மத, மொழி, நாடு, இன வேற்றுமைகளைக் களைந்து
மனித இனம் ஒன்றுபட வழிகாட்டிய
திருவள்ளுவர் சாதி, சமய அடையாளம் ஏற்பாரா?
மத்திய மேல்நிலைக் கல்வி வாரியம் வெளியிட்ட
எட்டாம் வகுப்பு இந்திப் புத்தகத்தைப் பார்த்தீர்களா?



இங்கே காண்பதுதான் திருவள்ளுவரும் அவர் துணைவி வாசுகியும் என்பது முறைதானா? இதனைப் படிக்கும் சிறுவர்களே! சிறுமிகளே! நீங்கள் சொல்லுங்கள். திருவள்ளுவருக்கு இப்படிச் சாதி அடையாளம் கொடுப்பது பொருந்துமா? முறைதானா?

உங்கள் கருத்துகளை ஐம்பது சொற்களுக்கு மிகாமல் எழுதி உங்கள் ஒளிப்படத்துடன் anjal@kuralvirtual.com என்னும் மின்னஞ்சல் முகவரிக்கு அனுப்புங்கள். தகுதிவாய்ந்த அனைத்துக் கட்டுரைகளும் வெளியிடப்படும். தகுதிச் சான்றிதழும் அனுப்பப்படும்.

# திருக்குறளால் உயர்ந்தேன்

## -எசு. யூ . சபா பத்தினா

வணக்கம்.என் பெயர் எசு. யூ . சபா பத்தினா

நான் அருள்மிகு வெங்கடேசுரா பதின்மப் பள்ளியில் ஏழாம் வகுப்பு படிக்கிறேன்

"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும் " (ஒழுக்கமுடைமை குறள் எண்:131)

என்னும் திருக்குறளை நான் மூன்றாம் வகுப்புப் படிக்கும்போதே என் பெற்றோர் எனக்குக் கற்றுக் கொடுத்தனர்.வாழ்வில் ஒழுக்கத்தின் இன்றியமையாமையை எனக்கு நன்கு உணர்த்திய அந்தக் குறள் நன்கு மனத்தில் பதிந்தது.அப்போது இருபது திருக்குறள் ஒப்பித்தலின் மூலம் என் திருக்குறள் பயணத்தை தொடங்கினேன். பிறகு திருக்குறள் அறக்கட்டளை நடத்திய போட்டிகளில் கலந்து கொண்டு பேச்சுப்போட்டியில் முதல் பரிசு பெற்றேன்.



எசு. யூ . சபா பத்தினா,
ஏழாம்வகுப்பு "அ" பிரிவு
அருள்மிகு வெங்கடேசுவரர்
மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி,
இராயப்பேட்டை,
சென்னை-14.

கவிதைப்போட்டியில் "முதல் பரிசு", கட்டுரைப் போட்டியில் "இரண்டாம் பரிசு", கட்டுரை வரைதல் போட்டியில் "மூன்றாம் பரிசு" என பல போட்டிகளில் பங்கேற்று பரிசுகளைப் பெற்றேன். மேலும் சென்னை மகாசன சபாவில் பேச்சுப்போட்டியில் கலந்து கொண்டு பரிசு வாங்கினேன்.

இத்தனை போட்டிகளில் கலந்து கொள்ள என் பள்ளி தலைமை ஆசிரியரும் ஏனைய பள்ளி ஆசிரியர்களும் என்னை போட்டிகளுக்கு சிறப்பாக தயார் படுத்தி மேலும் மேலும் பல போட்டிகளில் கலந்து கொள்ள என்னை ஊக்குவித்தனர்.

இப்படியாக திருக்குறள் எனக்கு திருக்குறள் தொடர்பான போட்டிகளில் கலந்து கொண்டதன் மூலமாக படிப்படியாக நான் உயர காரணமாய் உள்ளது. நன்றி. வணக்கம்.

# அன்பே வாழ்வின் தெம்பு



அன்பாய் நாளும் இருப்போமே
அதன்வழி நன்மை காண்போமே

நன்மைகள் வழங்கும் அன்புக்கு
தாழ்ப்பாள் இல்லை என்போமே

தன்மை நிறைந்த நண்பர்களை
நாளும் பெற்று மகிழ்வோமே

என்றும் வீரம் அன்பிணைந்தால்
எங்கும் வெல்லும் சொல்வோமே

அன்பெனும் உணர்வு குறைந்தாலோ
அனலில் புழுவாய் நெளிவோமே

அன்பே இல்லா உயிர்வாழ்க்கை
பாலையில் மரமென அறிவோமே



அன்பு என்பது இல்லையெனில்
உறுப்புகள் பயனிலை உணர்வோமே

அன்பாய் இவற்றைச் சொல்கின்ற
வள்ளுவர் வழியில் நடப்போமே!

-தமிழ் இயலன்





கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 2
பங்குனி 12, 2052
உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்

## திருக்குறளால் உயர்ந்தேன்!

ஐந்து வயதே நிறைந்த இந்த மழலைப்பிஞ்சு நேகா பெருமிதம் மிக்க அருஞ்செயல்கள் பற்பல செய்து வரலாறு படைத்துள்ளார்.நான்கு வயது இருக்கும்போதே ஐம்பது குறட்பாக்களைக் கற்றுத் திறமையுடன் தயக்கமின்றி ஒப்பித்துப் பாராட்டுகளும் பரிசுகளும் பெற்றுள்ளார்.

குழந்தைகளின் திறனறிந்து போற்றுகின்ற அமைப்புகளாகிய 'வண்ணத்துப்பூச்சிகள்', 'லாலிபாப் சிறுவர் உலகம்', சிறுவர் தமிழ்க் கதையாடல் (கிட்ஸ் தமிழ் சுடோரீஸ்) ஆகிய குழுக்களில் தமது பல்வேறு திறமைகளை வெளிப்படுத்திப் பாராட்டுப் பெற்று வருகிறார்.

நேகாவின் கற்பனைக் கதையாகிய "காடும் மலையும்" பேனா பிடித்த நட்சத்திரங்கள் ( kidstamilstories) புத்தகத்தில் வெளி வந்துள்ளது.



நேகா கத்தாரில் பசுஞ்சோலைப் பன்னாட்டுப் பள்ளியில் (Greenwood International school & kindergarten) உயர்மழலைவகுப்பில் (UKG) படித்து வருகிறார்.

'தேன்சிட்டு' சிறுவர் மாத இதழில் நேகாவின் படைப்புகள் வந்திருக்கின்றன. ஓவியம் வரைதல், கைவினைப் பொருட்கள் செய்தல், ஆடல், பாடல், கதை சொல்லல் ஆகிய கலைகளில் திறன் பெற்றுவருகிறார். 'சொந்தமாகக் கற்பனைக் கதையும் சொல்வாங்க' , 'சொந்தமாகப் பாடலும் பாடுவாங்க' , 'மாறுவேடம்' ஆகிய நிகழ்சிகளிலும் இவை போன்ற பல போட்டிகளிலும் கலந்து கொண்டு பரிசும் பாராட்டும் பெற்றுள்ளார்.அவர் பள்ளிக் கல்வியிலும் படுசுட்டி. நேகாவின் படைப்புகள் வண்ணத்துபூச்சிகள் குழுவின் மின்னிதழ் ஆகிய வண்ணம் தளத்தில் வலம் வருகின்றன.

நேகா இந்தியாவின் இளமையான எழுத்தாளர் ஆவார். (India's youngest writer at age 4 ) திருமதி எமல்டா தாமசு நினைவு விருது 2020 வழங்கும் விழாவில் கதைப் பிரிவில் நேகாவுக்கு 'எழுத்துச் சிற்பி' விருதை வண்ணத்துபூச்சிகள் குழு வழங்கினார்கள்.

பெற்றோர் தந்த ஊக்கத்தினால் திருக்குறள் படித்துவருகிறேன்; திருக்குறள் வழங்கும் ஊக்கத்தினால் பல கலைகளும் பயின்றுவருகிறேன்." எனக் கூறும் இந்த மழலைமேதை 'திருக்குறளால் உயர்ந்தேன்;மேலும் உயர்வேன்' எனக் கூறுவது மகிழ்வளிக்கிறது.

நம் அன்பு வாழ்த்துகள். உயர்க! வெல்க!

---

*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

*இணையாசிரியர்கள் : தி.ஈழக்கதிர், திருமதி.செயசாலினி இரத்தினமேரி, திருமதி.சுபா.அருணாசலம்*

---

# இனிய சொல்லைப் பேசுவதே சிறந்த அறம்

- திருமதி.தாமரை சீனிவாசராவ்



மேகலையும் செல்வியும் எதிரெதிர் வீட்டில் வசிக்கும் தோழிகள். சிறுவயதிலிருந்தே பள்ளியிலும் சரி ,வெளியில் போனாலும்சரி, இணைபிரியாத் தோழிகளாவே வலம் வருவார்கள். செல்வி எப்போதும் தன்னைச் சுற்றிவரும் தோழிகளுக்கு எப்போதும் ஏதாவது வாங்கிக் கொடுத்துக்கொண்டு இருப்பாள். ஆயினும் கோபக்காரி. யாராவது தனக்கு எதிராக ஏதாவது கூறிவிட்டால் சட்டென்று கோபித்துக்கொண்டு கத்திவிடுவாள்.

ஆனால் மேகலையோ அனைவரிடமும் அன்பு பாராட்டி இன்முகத்துடன் பதிலளிப்பாள். என்னதான் செல்வி நல்லகுணத்துடன் இருந்தாலும், அவளைவிட மேகலையிடமே அனைவரும் மகிழ்ச்சியாகக் கூடி விளையாடுவதும், பேசுவதுமாக இருந்தார்கள்...

ஒருநாள் செல்விக்குச் சிறிது வருத்தம் ஏற்பட்டு, தன் அப்பாவிடம் "என்னப்பா நான் என் பொருளெல்லாம் பகிர்ந்துகொண்டால் கூட அந்த மேகலை கிட்டதான் எல்லாரும் அன்பா நடந்துக்குறாங்க... அவக்கூடத்தான் நிறையப்பேர் விளையாடறாங்க... நான் என்னப்பா தவறு செய்தேன் " என்று அழுதவாறு கேட்டாள்.

அதற்குச் செல்வியின் அப்பா "அப்படி இல்லடா கண்ணு .... நீயும் நல்ல பிள்ளைதான்... உன்னையும் எல்லாருக்கும் பிடிக்கும்.... ஆனா மேகலையப்பாரு, எல்லாரிடமும் சிரித்த முகத்தோடு எப்படிப் பழகறான்னு பாரு... நம்ம என்னதான் நம்ம கிட்ட இருக்கிற செல்வங்களைப் பிறருக்குக் கொடுத்தாலும், மனதார மகிழ்ந்து, சிரித்த முகத்தோட ஒருவார்த்தை கூறினால் கூட அதுதான் பிறர் மனத்தில் நிற்கும்...நீயும் அதைச் செய்துபாரு, உனக்கு எவ்வளவு பேரு நட்பாய் அமையறாங்கன்னு ... என்று கூறினார்.



"சரி அப்பா! தாங்கள் கூறுவது போலவே பின்பற்றி நடக்கிறேன்" என்று செல்வியும் மகிழ்வோடு கூறி , இன்முகத்தோடு வெளியில் வந்தாள்.

அகனமர்ந்து ஈதலின் நன்றே முகனமர்ந்து
இன்சொல னாகப் பெறின்"- குறள் எண்: 92

**விளக்கம்**: நாம் பிறருக்கு மனம் விரும்பி ஒரு பொருளைக் கொடுப்பதைக் காட்டிலும், நாம் மலர்ந்த முகத்தோடு பிறரிடம் இனிய சொற்களைப் பேசுவதே சிறந்தது.

# உண்மையான கண்

## (திருக்குறள் பற்றிய உரையாடல்)

**- முரசு நெடுமாறன்**

---



*இந்த சுவைமிகு உரையாடலை வழங்கியவர் 'மலேசியாவின் அழ.வள்ளியப்பா' என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர்முரசு நெடுமாறன் ஆவார். மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக்குழந்தைப் பாடல்களும்நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச் சாதனையாளர் இவரே.. 'மலேசியக் கவிதைக்களஞ்சியம்' என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது.தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.*

---

(அழகிய பூங்கா ஒன்றனில் அருளன்தன் நண்பன் மாமணிக்காகக் காத்திருந்தான். அப்போது அங்கே வேறொரு நண்பனான பொன்னழகன் வருகிறான்)

அருளன் : வணக்கம். வா பொன்னழகன். நான் கண்ணில்லாத ஒருவனுக்காகக் காத்திருக்கிறேன். எதிர்பாராமல் நீயும் வந்தாய். மகிழ்ச்சி.

பொன்னழகன் : என்ன?கண்ணில்லாதவனுக்காகக் காத்திருக்கிறாயா? யாரந்தக் கண்ணின்லாதவன்?

அருளன் : அவன் உனக்கும் தெரிந்தவன் தான்.

பொன்னழகன் : கண்ணில்லாதவன் எவனையும் எனக்குத் தெரியாதே.

அருளன் : அவன்வருவான் பார்த்ததும் தெரிந்து கொள்வாய்.

பொன்னழகன் : கண்ணில்லாத குருடன் எப்படி இங்கே வருவான்?

அருளன் : வந்துவிட்டான். அதோபார்!

பொன்னழகன் : என்ன அருளன்? அவன் பொன்னழகன்தானே?(சினத்தோடு) அவனை நீ கண்ணில்லாதவன் என்று சொல்லலாமா?

அருளன் : அவன் கண்இல்லாதவன்தான் என்று இன்னும் சிறிது நேரத்தில் தெரிந்து கொள்வாய் (வந்த நண்பனைப் பார்த்து) வா மாமணி. எதிர் பாராமல் நம் நண்பன் பொன்னழகனும் வந்து விட்டான்.

மாமணி : மகிழ்ச்சி. நான் பொன்னழகனை இங்கு எதிர்பார்க்கவில்லை.

அருளன் : அதனால் என்ன? இன்னொரு நண்பன் வந்ததில் மகிழ்ச்சிதானே?

| | | |
|---|---|---|
| மாமணி | : | மகிழ்ச்சிதான். |
| பொன்னழகன் | : | உங்கள் இருவரையும் இங்கே கண்டதில் எனக்குப் பெருமகிழ்ச்சி. |
| மாமணி | : | சரி, என்னை இங்கு ஏன் வரச் சொன்னாய் அருளன்? |
| அருளன் | : | நல்லதுக்குத்தான் வரச் சொன்னேன். |
| மாமணி | : | நல்லதுக்கா? |
| அருளன் | : | ஆம்! உனக்கொரு பரிசு கொண்டுவந்திருக்கிறேன். |
| மாமணி | : | பரிசா? என்ன பரிசு? விளையாட்டுப் பொருளா? சட்டையா? சுவையான தின்பண்டமா? |
| அருளன் | : | நீ சொன்னவற்றை எல்லாம் விட மிகமிக உயர்ந்த பரிசு. |
| பொன்னழகன் | : | என்ன அருளன்? ஒரு சிறிய பையைமட்டுமே கையில் வைத்திருக்கிறாய். மாமணியை ஏமாற்றப் போகிறாயா? |
| அருளன் | : | இல்லை. இல்லை. மாமணி, கடந்த வாரம் நடந்த ஒரு பூப்பந்துப் போட்டியில் வெற்றி பெற்றுக் கோப்பை பரிசு பெற்றான். அவனைப் பாராட்ட விலைமதிப்பில்லாத ஒரு பரிசைக் கொண்டு வந்திருக்கிறேன். |
| பொன்னழகன் | : | என்ன பரிசு?சொல். தங்கமா?வயிரமா? |
| அருளான் | : | அவற்றைவிட மதிப்புமிக்கது |
| பொன்னழகன் | : | சும்மா சொல்லிக் கொண்டே இருக்காதே. உடனே கொடு. |
| அருளன் | : | இதோ கொடுக்கிறேன் (தான் கொண்டுவந்த பையிலிருந்த திருக்குறளை எடுத்துக் கொடுத்து(கல்வி என்ற அதிகாரத்தைத் திறந்து), இதைப் படித்துக்காட்டு) |
| மாமணி | : | என்னால் இதைப் படிக்க முடியாது. |
| அருளன் | : | ஏன் கண்தெரிய வில்லையா? |
| மாமணி | : | என்ன? எனக்கா? உங்களைப் பார்க்கிறேன். அங்கே உள்ள ஏரியைப் பார்க்கிறேன். அதைச் சுற்றிப் பூத்துக் குலுங்கும் மரங்களைப் பார்க்கிறேன். |
| அருளன் | : | உன்னால் எல்லாவற்றையும் நன்றாகப் பார்க்க முடிகிறது. ஆனால் இந்தப் புத்தகத்தில் உள்ள திருக்குறளைப் படிக்க முடியவில்லை. அதனால் கண் இருந்து என்ன பயன்? |
| மாமணி | : | என் அப்பா படிக்கவில்லை; என் அம்மா படிக்கவில்லை. ஆனால் எல்லா வேலைகளையும் செய்கிறார்கள். நாங்கள் பெரும் பணக்காரர்கள். வாழ்வதற்கு அது போதாதா? |
| அருளன் | : | போதாது. ஒரு மனிதன் பிறரால் மதிக்கப்பட வேண்டுமானால் அவன் கல்வி அறிவைப் பெற்றிருக்க வேண்டும். அப்போதுதான் அவன் தன்னை உணரமுடியும், கலைகளை அறிய முடியும்; பண்பாட்டைப் போற்றி வாழமுடியும். |

| | | |
|---|---|---|
| பொன்னழகன் | : | ஆமாம். மாமணி. உன் அப்பாவைப் பணத்துக்காகத்தான் சிலர் மதிக்கிறார்கள். அறிவாளிகள் உன் அப்பாவை மதிப்பதில்லை. உன் அப்பாவால் இதழ்களையோ, புத்தகங்களையோ படித்து, எதனையும் புரிந்து வாழ முடியாது. |
| அருளன் | : | உன் அப்பாவிடம் உள்ள பணத்தை யாராவது கொள்ளை அடித்துவிட்டால், உன் அப்பா செல்லாக் காசாகி விடுவார். |
| மாமணி | : | மற்றவர் பணத்தைக் கொள்ளை அடிப்பவர்களும் இருக்கிறார்களா? |
| பொன்னழகன் | : | இருக்கிறார்கள். ஆனால் கல்விச் செல்வத்தை யாராலும் கொள்ளை அடிக்க முடியாது. நம்மிடம் உள்ள பணத்தைப் பாதுகாக்கவும் கல்வி அறிவு தேவை. அதனால்தான் 'கல்வியே கண்' என்றார்கள். |
| அருளன் | : | நான் இந்தக் குறளைப் படித்துக்காடுகிறேன்; கேள்.<br><br>***"கண்உடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு<br>புண்உடையர் கல்லாதவர்** (393).* |
| மாமணி | : | இந்தக் குறளின் பொருளை விளக்கு அருளன். |
| அருளன் | : | கல்வி கற்றவர் முகத்தில் உள்ளவைதாம் கண்கள்; கல்லாதவர் முகத்தில் உள்ளவை புண்கள் என்பது இதன் பொருள். |
| பொன்னழகன் | : | அப்படி என்றால் மாமணி முகத்தில் உள்ளவை..........? |
| அருளன் | : | ம்........... அதை நான் சொல்ல வேண்டுமா? |
| பொன்னழகன் | : | மாமணி,திருக்குறளை எழுதிய திருவள்ளுவர், உலக அறிஞர்களில் தலை சிறந்தவர். அவர் நாம் வாழ்வதற்குரிய வழிகளை இனிய முறையில் எடுத்துச் சொன்னவர். |
| அருளன் | : | மாமணி, நீ இன்னும் சிறுவனே. நீ மனம் வைத்தால் விரைவில் கல்வி கற்றுவிடலாம். உன் அப்பாவிடம் சொன்னால், ஆசிரியர்களை வீட்டிற்கே வரவழைத்து நீ படிக்க ஏற்பாடு செய்வார். நீ எளிதில் கற்று உயரமுடியும். |
| மாமணி | : | எனக்குறை இப்பொழுதுதான் எனக்குத் தெரிகிறது. என் அப்பாவிடம் உள்ள பணமே போதுமென்று நினைத்தேன். கல்வியே சிறந்த செல்வம் என்பதை இப்பொழுதுதான் உணர்கிறேன். |
| அருளன் | : | மாமணி, உன் மனமாற்றம் எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது. |
| பொன்னழகன் | : | ஆமாம். மாமணி. முயற்சிசெய். முயற்சி திருவினையாக்கும். |
| அருளன் | ; | வாழ்த்துகள். மாமணி! முயற்சி செய். வெற்றி உன் கையில். |
| பொன்னழகன் | : | நீங்கள்இருவரும் எனக்குப் புதுப்பாதை காட்டினீர்கள். உங்கள் துணையோடு முயற்சி செய்வேன். உங்களுக்கு நன்றி. |
| அருளன்<br>பொன்னழகன் | : | நல்லது. சென்றுவா மாமணி! |



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 3
சித்திரை 12, 2052
உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்

## இன்பம்!

-புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்



பசி என்று வந்தால் ஒருபிடி சோறு
புசி என்று தந்துபார் அப்பா! (பசி என்று வந்தால்...)
பசையற்ற உன்நெஞ்சில் இன்பம் உண்டாகும்
பாருக் குழைப்பதே மேலான போகம்! (பசி என்று வந்தால்...)
அறத்தால் வருவதே இன்பம்-அப்பா,
அதுவலால் பிறவெலாம் துன்பம்!
திறத்தால் அறிந்திடுக அறம்இன்ன தென்று
செப்புநூல் அந்தந்த நாளுக்கு நன்று! (பசி என்று வந்தால்...)
மனுவின்மொழி அறமான தொருநாள்-அதை
மாற்று நாளே தமிழர் திருநாள்
சினம், அவா, சாதி, மதம் புலை நாறும் யாகம்
தீர்ப்பதே இந்நாளில் நல்லறம் ஆகும்! (பசி என்று வந்தால்...)

*(இசையமுது (முதல் தொகுதி) சிறுவர் பகுதி)*







*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

*இணையாசிரியர்கள் : தி.ஈழக்கதிர், திருமதி.செயசாலினி இரத்தினமேரி, திருமதி.சுபா.அருணாசலம்*

# சிறுவர் குறள் நெறிக் கதை
# அன்புடையார்
## -முரசு நெடுமாறன்

*இந்தச்சிறுவர் கதையை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா" என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக்குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.*



அது ஒரு குடிசைவீடு. அதில் முகிலன் தன் தாயுடன் வாழ்ந்து வந்தான். அவன்தாய் கூலிவேலை செய்து அதில் கிடைக்கும் வருவாயில் வாழ்ந்து வந்தார். அவர் ஓரளவு படித்தவர். ஒவ்வொரு நாளும் திருக்குறள் படிக்கத் தவற மாட்டார்.

அவர் தன் மகன் முகிலனைக் கருத்தோடு படிக்க வைத்தார். அவன் தமிழ்ப் பள்ளியில் படித்தான். தமிழோடு மற்ற மொழிகளிலும் தன் திறனை வளர்த்துக் கொண்டான். அவனுடன் படித்த பழனி அடிக்கடி இவன் வீட்டிற்கு வருவான். பழனி பணத்தின்மேல் அதிக நாட்டம் உடையவன். படிப்பில் அவன் கருத்துச் செலுத்துவது குறைவு பணம் இருந்தால் எல்லாவற்றையும் வாங்கிவிடலாம் என்ற மனப்பான்மை கொண்டவன். முகிலனின் அன்னை ஒருநாள் முகிலனுக்கும் அவன் நண்பன் பழனிக்கும் திருக்குறள் சொல்லிக் கொடுத்தார். அன்று அவர் சொல்லிக் கொடுத்த குறள்,

அன்புஇலார் எல்லாம் தமக்குரியர்; அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு (72)

என்ற குறள். இந்தக் குறளைச் சொல்லிக் கொடுத்து, இதற்கு விளக்கமும் கூறினார்.

அன்பு இல்லாதவர் எல்லாமே தமக்கு வேண்டும் என்று நினைப்பார்கள். பிறருக்கு எந்த உதவியும் செய்ய மாட்டார்கள். ஆனால் அன்பு உடையவர்கள் நெருக்கடியான நிலையில் மற்றவர்க்குத் தேவைபட்டல் தன் உடலில் உள்ள எலும்பையும் அவர்க்குத் தரத் தயங்கமாட்டார்கள். எலும்பையும் என்பது நம்

உடலில் உள்ள எலும்பை உடைத்து அவர் கையில் கொடுப்பது என்று பொருள் கொண்டுவிடக் கூடாது. எவ்வகை உதவியும் செய்யத் தயங்கமாட்டார்கள் என்று உணர்ந்து கொள்ள வேண்டும் என்றார்.

அன்னை திருக்குறளுக்கு இப்படிப் பொருள் கூறிவிட்டு வேலைக்குப் புறப்பட்டுவிட்டார். அவர் போனபின் முகிலனிடம் பழனியிடம் இப்படிக் கூறினான்:

"முகிலன், உன் அம்மா சொல்கிறமாதிரி நடக்க முடியாது; அப்படி நடக்கவும் கூடாது. நமக்கு அன்பைவிடப் பணமே முக்கியமாகும். பணம் இருந்தால்தான் மற்றவர்கள் நம்மை மதிப்பார்கள்" என்று சொல்லிவிட்டு அவன் வீடிற்குப் புறப்பட்டு விட்டான்.



மறுநாள் பழனி முகிலனுடன் பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தான். அவன் நடைபாதையில் கவனம் செலுத்தாமல் ஏதேதோ உளறிக் கொண்டே வந்தான். முகிலன் சொன்ன எதனையும் அவன் காதில் வாங்கிக் கொள்ளவில்லை. வழியில் ஏற்பட்டிருந்த பள்ளத்தில் அவன் கால் மாட்டி, "ஐயோ அம்மா" என்று கீழே சாய்ந்தான். பெரிய காயம் ஏற்பட்டு இரத்தம் குபுகுபு எனக் கொட்டியது.

நண்பனின் நிலைகண்டு துடித்துப் போனான் முகிலன். அப்போது அங்கே ஒருவர் மகிழுந்தில் வந்து கொண்டிருந்தார். முகிலன் அவர் மகிழுந்தை நிறுத்தினான். அவரும் நின்றார். அங்கிருந்த நிலையைக் கண்டு இறங்கினார். முகிலன் கேட்காமலேயே அவரே முன்வந்து பழனிக்கு முதல் உதவி செய்து அவனைத் தன் மகிழுந்தில் மருத்துவமனைக்குக் கொண்டு சென்றார். அங்குச் செய்ய வேண்டியன எல்லாம் செய்து டாக்டரிடம் ஒப்படைத்தார்.

பழனியைச் சோதித்த டாக்டர் "இரத்தம் அதிக அளவு வெளியேறிவிட்டதால் பையன் மயக்கம் அடைந்துவிட்டான். உடனடியாக இரத்தம் செலுத்தினால்தான் பையன் பிழைப்பான்" என்றார் டாக்டர். நான் இரத்தம் தருகிறேன் டாக்டர். பையனை எப்படியாவது காப்பாற்றுங்கள் என்றார்.

டாக்டரும் மருத்துவமனைப் பணியாளர்களும் மிக விரைந்து செயல்பட்டனர். நல்ல வேளையாகப் பழனி காப்பாற்றப்பட்டான். உதவ வந்தவர் முகிலனைப்பார்த்து, "தம்பி, நல்ல வேலையாக உன் நண்பன் பிழைத்துக் கொண்டான். இவன் பெற்றோர்க்குச் செய்தி அனுப்பப்பட்டுவிட்டது. நான்

புறப்படுகிறேன். பிறகு வந்து பார்ப்பேன் என்று சொல்லிவிட்டு அந்த நல்ல மனிதர் புறப்பட்டார்.

பழனி சில நாள்கள் மருத்துவ மனையில் தங்கி இருக்க வேண்டுவதாயிற்று. உடல் நலம் சரியாகி வீடு திரும்பினான். முகிலனும் அவன் அன்னையும் அவன் நலம் விசாரிக்க அவன் இல்லம் சென்றனர். பழனியின் பெற்றோர் அவர்களை அன்புடன் வரவேற்றனர். முகிலனுக்கு கனிந்த அன்போடு நன்றி கூறினர். பழனிக்குத் திருக்குறள் கற்பிக்கும் முகிலனின் அன்னையை வெகுவாகப் பாராட்டினர்.

“உடனே பழனியைப் பார்க்கவேண்டும்” என்று இருவரும் துடித்தனர். வீட்டின் மாடியில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பழனியிடம் அவன் பெற்றோர் அழைத்துச் சென்றனர்.

முகிலனையும் அவன் அன்னையையும் பார்த்த பழனி இருகைகளையும் குவித்து நன்றி கூறி வணங்கினான். முகிலனும் அவன் அன்னையும் அவனுக்கு ஆறுதல் கூறினர்.

பழனி அவர்களைப் பார்த்து, “அம்மா முகிலன் இல்லை என்றால் நான் செத்தே போயிருப்பேன். அவனுடைய அன்பாலும் உதவும் மனத்தாலும்தான் நான் பிழைத்தேன்.

“துன்பம் வரும் காலத்தில் உதவுவதுதானே நட்புக்கு அழகு. இது இயல்பாக எல்லாரிடமும் இருக்க வேண்டிய குணம்” என்றார் அன்னை.

“அம்மா நீங்கள் அன்று கூறிய குறளின் பொருள் எனக்கு இப்பொழுதுதான் புரிகிறது.

என்னைக் காப்பாற்ற அந்த வழிப்போக்கர் இரத்தம் கொடுத்தாரே, அதை நான் இரத்தமாகக் கருதவில்லை. அவர் எலும்பையே எனக்குத் தந்து என்னைக் காப்பாற்றினார் என்று நன்றியோடு நினைக்கிறேன்” என்றான் பழனி.

தான் கற்பித்திருந்த குறள் மாணவனை மனித நேயம் மிக்கவனாக மாற்றி இருக்கிறது என்று பெருமிதப்பட்டார் அன்னை. பழனிக்கு அன்புடன் ஆறுதல் கூறிவிட்டு முகிலனுடன் விடைபெற்றுக் கொண்டார்.

# புறஞ் சொல்லல் ஆகாது பாப்பா

**-திருமதி.தாமரை சீனிவாசராவ்**



ஒரு மாலைவேளையிலே ஆறுமுகம் தாத்தா தம் பேரப்பிள்ளைகளோடு விளையாடிக்கொண்டு இருந்தார். எதிர்வீட்டுக் குழந்தைகளும் பக்கத்துவீட்டுக் குழந்தைகளும் எல்லோரும் ஒன்றாய்ச் சேர்ந்து விளையாடுவதை வழக்கமா கொண்டிருந்தார்கள். விளையாட்டு மட்டுமில்லாமல் படிக்கவும் உதவிசெய்வார், ஆறுமுகம் தாத்தா. அதனால் அவரைச் சுற்றி எப்போதும் பிள்ளைகள் கூட்டம் இருக்கும்.

இப்படி ஒருநாள் பேசிக்கொண்டு இருக்கும்போது பள்ளியில் நடந்த நிகழ்வுகளை அவரின் பெயர்த்தி வரிசையாகச் சொல்லிக்கொண்டு இருந்தாள்.

“தாத்தா! என் வகுப்புத்தோழி சுந்தரி எப்போது பார்த்தாலும் 'அவளிடம் பேசாதே அவ பொறாமைக்காரி, இவளிடம் பேசாதே அவ நல்லவ இல்லை' என்று பிறர்மீது அடிக்கடி குறை கூறுகிறாள் .ஆனால் அவர்களிடம் அவள் பேசும்போது நல்லவள்போல் நடிக்கிறாள். உன்போல்வருமா என்கிறாள்.

எனக்கு ஒன்றுமே புரியவில்லையே. நம் தோழியரைப் பற்றி நாமே இப்படி பேசலாமா? “ என்று கேட்டாள். அதற்குத் தாத்தா அனைத்துப்பிள்ளைகளையும் அழைத்து, “எல்லாம் இங்க ஓடிவாங்க. சாந்தி அழகான ஒரு ஐயம்(சந்தேகம்) கேட்கிறாள். அவள் மட்டும் அதற்கு விளக்கம் கேட்டால் போதாது. நீங்க அனைவரும் தெரிஞ்சிக்கணும் “ என்றார்.



விளையாடிக் கொண்டிருந்தவர்கள் ஆர்வத்துடன் ஓடிவந்தனர். இன்றைக்கு வள்ளுவர் சொன்ன புறங்கூறாமை பற்றி உங்களுக்கு சொல்லித்தரப் போறேன். நாம் நம் நண்பர்களைப் பற்றியோ, உறவினர்களைப் பற்றியோ, சுற்றத்தாரைப் பற்றியோ, அவர்கள் இல்லாதபோது பேசுவது சரியா? தப்பா?“ ,என்று கேட்டார்.

அப்போது குமரன் “தப்பு தாத்தா! யாரைப் பற்றியும நாம் இழிவாகவோ, தப்பாகவோ பேசக்கூடாது“ என்றான்.

"ஆமாம்! சரியாகச் சொன்னாய் குமரா! நம் வள்ளுவர் என்ன சொல்லி இருக்காரு தெரியுமா? 'கொடியகுணம் உடையவனாக இருந்தாலும், நல்லதை எதையும் சொல்லாதவனாகவோ, செய்யாதவனாகவோ இருந்தாலும், அவன் பிறரைப்பற்றி புறம் பேசாதவனாக இருந்தா அதுவே அவனுக்கு நல்லதாக இருக்கும். " என்று கூறியுள்ளார்.

"என்ன சாந்தி? புறங்கூறுதல் மிகக்கேடான பண்புதானே? இதைத் தானே 'புறஞ் சொல்லல் ஆகாது பாப்பா' என்று பாரதியாரும் தமது பாப்பாப் பாட்டில் அறிவுறுத்துகிறார்?" இது தாத்தா கேட்ட கேள்வி.

"ஆமாம் தாத்தா! கோள் மூட்டுதல் என்றும் இதனைக் குறிப்பிடுகிறோம். சமுதாயத்திற்கு நல்ல தொண்டு புரிவதில் கருத்துச் செலுத்தினால் இப்படிப் பொறுப்பில்லாமல் பிறர்மீது புறங்கூறுதல் ஒழிந்துபோகும். " என ஒரு பாட்டி போல முதிர்ச்சியுடன் விடையளித்தாள் சாந்தி.

"அருமையான விடை. இதனை உன் நண்பர்களுக்குச் சொல்கிறாயா?" என்று தாத்தா ஆவலாய்க் கேட்டார்.

"உறுதியாகக் கூறுவேன் தாத்தா" என்று சாந்தியும் மகிழ்வுடன் கூறினாள். நல்ல செய்தியைக் கேட்ட அனைவரும் மகிழ்ச்சியாக மீண்டும் விளையாடச் சென்றனர்.

அறங்கூறான்அல்லசெயினும்ஒருவன்
புறங்கூறான்என்றல்இனிது. புறங்கூறாமை - 181

# சோம்பேறிச் சொக்கன்

## -குருபரன் செந்தில்குமார்

மதுரை மாநகரில் பொறியாளர் பொன்னுச்சாமிக்கும் பேராசிரியர் மங்கையர்க்கரசிக்கும் திருமகனாய்ப் பிறந்தவன்தான் நம் கதைத்தலைவன் சொக்கன்.உலகின் சோம்பேறித்தனம் அத்தனையையும் மொத்தமாய்க் குத்தகைக்கு எடுத்துகொண்டவன்போல் அவ்வளவு சோம்பேறி.

குழந்தையாய்ப் பிறந்தபொழுதிலே அழுவதற்குச் சோம்பல்பட்டுக்கொண்டு மொச்சைக்கொட்டை விழிகளை உருட்டி மருத்துவமனையில் எல்லாரையும் மிரட்டிவிட்டான்.ஆரோக்கியமான குழந்தை பிறந்ததும் அழவேண்டுமே? மகப்பேறு பார்த்த மருத்துவர் சொக்கனின் அம்மாவின் தோழிதான்.அவனுடைய இரண்டு கால்களையும் கொத்தாகப் பிடித்து அப்படியே தலைகீழாகத் தொங்கவிட்டபின் ஊரையே அலறவைக்கும் வகையில் அழுதான்.அந்த நேரத்தில் அவனைப் பிறவிச்சோம்பேறி என செல்லமாகக் கூறினார் மருத்துவர்.ஆனால் அதனை அப்படியே உண்மையாக்கிவிட்டான் சொக்கன்.

காலையிலேயே எழுந்திருக்கச் சோம்பல்; பல் விளக்கச் சோம்பல்; குளிக்கச் சோம்பல்;சிற்றுண்டி அருந்தச் சோம்பல்;என எல்லாவற்றிற்கும் சோம்பல்கொள்ளும் சோம்பல்திலகமாய் விளங்கினான்.

படுத்திருக்கும் போதே தன் வாயில் காப்பியை ஊற்றுமாறு கட்டளையிடுவான்.பெரிய மனது பண்ணி ஒரு காக்காய்க் குளியல் போட்டுவிட்டால் சிற்றுண்டியை வாயில் ஊட்டச் சொல்வான். அப்பா, அம்மாவுக்கு அவனைக் கண்டிக்க மனமில்லை.ஒரே புதலவன் அல்லவா?

அறிவார்ந்த பெற்றோரின் புதல்வன் என்பதால் அவன் சோம்பேறியாய் இருந்தாலும் அறிவாளியாய் விளங்கினான்.பாடங்களை உடனுக்குடன் கற்றுக்கொண்டான்; எல்லாப் பாடங்களிலுமே ஆசிரியர்கள் கேட்கும் கேள்விகளுக்கு அருமையாய் விடை வழங்குவான்.ஆனால் தேர்வு நட்த்தி வினாகளுக்கு விடை வழங்கும் முறை அவனுக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

"ஆசிரியர் சொல்லிக் கொடுப்பதை அப்படியே மீண்டும் எழுதிக் காட்டுவதில் என்ன அறிவு வளர்ந்துவிடப் போகிறது?மதிப்பெண் வழங்குவது நினைவாற்றலுக்கா அல்லது அறிவாற்றலுக்கா?? " எனும் வினாக்களை அவன் இரண்டு மூன்றாண்டுகளாகக் கேட்டுவருகிறான்.

ஏதோ கல்விமேல் உள்ள அக்கறையால் அவன் இப்படிச் சிந்திக்கவில்லை.தேர்வு எழுதச் சோம்பல்பட்டுக் கொண்டுதான் இந்த வீண்வாதம் புரிந்தான்.

ஆகா!அந்த நாளும் வந்ததே!தொலைக்காட்சிப் பெட்டி கிளிப்பிள்ளை போல் திருப்பித்திருப்பிச் சொன்னது:

"பத்தாம் வகுப்புத் தேர்வுகள் ரத்து! "

ஆனந்தக் கூத்தாடினான் சொக்கன்.நாடென்றால் இதுவல்லவோ நாடு?அரசு என்றால் இதுவல்லவோ அரசு?

செய்தியைப் பாட்டாகப் பாடிக் கூத்தாடினான் சொக்கன்.

பத்தாம் வகுப்புத் தேர்வுகள் ரத்து!
பாடப் புத்தக மூட்டையைக் கட்டு!

சொக்கனின் மகிழ்ச்சிக்குக் காரணம் அனைவரும் அறிந்ததே.ஆடிப் பாடிக் கூத்தாடிய சொக்கனுக்குத் திடீரெனத் தொண்டை வலித்த்து.

அன்று மாலை மருத்துவமனைக்குச் சொக்கன் சென்றான்.வாசலிலே ஒரே கூச்சல்.குழப்பம்.அந்த மருத்துவர் யாருக்கோ தொண்டைவலிக்கு மருத்துவம் பார்த்துள்ளார்.ஆனால் நோயாளிக்குக் காது கேட்காமல் போய்விட்டது.

"என்ன ஐயா மருத்துவம் பார்க்கிறார்கள்?தொண்டைக்கு மருந்து கொடுத்தால் காது கேட்காமல் போவதா?எந்தக் கல்லூரியில் மருத்துவர் படித்தார்?எப்படித் தேர்வு பெற்றார்? "யாரோ ஒருவர் சத்தம் போட்டார்.

"இவரே இந்த இலட்சணம் என்றால் இப்போது கல்லூரிக்கே போகாமல் இணையவழிப் படிக்கத் தொடங்கிவிட்டார்கள்.இப்படிப் படிப்பவர்கள் மருத்துவராக வந்தால் நம் உயிருக்கு என உத்தரவாதம்? " இது வேறொருவர் கேள்வி.

ஒரேயடியாகத் தலைசுற்றியது சொக்கனுக்கு. இப்படியே சோம்பேறித்தனத்தை வளர்த்துக்கொண்டு போனால் தன்னைப் போன்ற மாணவர்களின் எதிர்காலம் கேள்விக்குறியாகிவிடும் என்பதையும் புரிந்துகொண்டான்.உழைப்புக்கு ஈடு இணை ஏதுமில்லை என்னும் தெளிவோடு படித்து அறிவை மேம்படுத்திக்கொண்டால் தனக்கு மட்டுமின்றி நாட்டுக்கும் வளமான வருங்காலம் கிட்டும் என்னும் முடிவுக்கு வந்தான்.

ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்கம் உடையான் உழை.- குறள் 594-ஊக்கம் உடைமை

உயர்வு, உறுதியான ஊக்கமுடையவர்களைத் தேடிக் கண்டுபிடித்து அவர்களிடம் போய்ச் சேரும்.

குடி என்னும் குன்றாவிளக்கம் மடி என்னும்
மாசு ஊர மாய்ந்து கெடும். .- குறள் 601- மடி இன்மை

தான் பிறந்த குடும்பம் என்னும் அணையா விளக்கு, சோம்பல் என்னும் மாசு படிய அணைந்து போகும்.



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 4
வைகாசி 10, 2052
உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்


## சிறார் பொறுப்பு!

-புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்



இன்று குழந்தைகள் நீங்கள்-எனினும்
இனி இந்த நாட்டினை ஆளப்பிறந்தீர்!
இன்று குழந்தைகள் நீங்கள்!

நன்றாய்ப் படியுங்கள்! நாட்டின் குழந்தைகாள்!
ஒன்றாய் இருங்கள் உயர்வினை எண்ணுங்கள்!
இன்று குழந்தைகள் நீங்கள்!



குன்றினைப்போல் உடல்வன்மை வேண்டும்!
கொடுமை தீர்க்கப்போ ராடுதல் வேண்டும்!
தின்றதையே தின்று தெவிட்டுதல் இல்லாமல்
அன்றன்று வாழ்விற் புதுமை காணவேண்டும்!
இன்று குழந்தைகள் நீங்கள்!



பல்கலை ஆய்ந்து தொழில்பல கற்றும்
பாட்டிற் சுவைகாணும் திறமையும் உற்றும்
அல்லும் பகலும் இந்நாட்டுக் குழைப்பீர்கள்!
அறிவுடன் ஆண்மையைக் கூவி அழைப்பீர்கள்!
இன்று குழந்தைகள் நீங்கள்!
*(இசையமுது (முதல் தொகுதி) சிறுவர் பகுதி)*




*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

*இணையாசிரியர்கள் : தி.ஈழக்கதிர், திருமதி.செயசாலினி இரத்தினமேரி, திருமதி.சுபா.அருணாசலம்*

## சிறுவர் குறள் நெறிக் கதை

## அன்புடையார்

### -முரசு நெடுமாறன்

*இந்தச்சிறுவர் கதையை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா" என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக்குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.*



பூங்குன்றன் பன்னிரண்டு அகவை கொண்ட சிறுவன். அவன் அன்னை உடல்நலம் இல்லாததால் இரண்டு மூன்று நாள்களாக வேலைக்குச் செல்லவில்லை. அவர் அன்றாடம் கூலிவேலைக்குச் சென்று, அதில் கிடைக்கும் குறைந்த சம்பளத்தைக் கொண்டு வாழ்பவர். வேலைக்குச் செல்லாத நாள்களில் கூலி கிடைக்காது. திடீரென அவர் உடல்நலம் குன்றியதால் இரண்டு மூன்று நாள்கள் வேலைக்குச் செல்ல முடியவில்லை. அதனால் உணவுக்கே வழி இல்லாமல் போனது.

உடல்நலம் குன்றியதாலும், உணவு இல்லாததாலும் அவர் சோர்வாகப் படுத்திருந்தார். பூங்குன்றன் அன்னை படுத்திருந்த இடத்திற்கு வந்தான். அவர் அருகில் அமர்ந்தான்; "அம்மா பசிக்கிறதா?" என்றான்.

"எனக்குப் பசியில்லை, டப்பாவில் ரொட்டித் துண்டுகள் வைத்திருக்கிறேன் நீ சாப்பிடு" என்றார். ரொட்டித்துண்டுகள் போதிய அளவு இல்லை. எனினும், "சாப்பிட்டேன் அம்மா" என்று சொல்லி விட்டு, "அம்மா நான் கொஞ்சம் வெளியே சென்று வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப் புறப்படலானான்.

"எங்கே போகிறாய்? வேண்டா. வெளியே செல்ல வேண்டா" " என்றார். "கொஞ்ச நேரத்தில் வந்து விடுவேன்" " என்று சொல்லிவிட்டுப் புறப்படலானான்.

வயிற்றில் பசி; மனத்தில் கவலை; யாரிடமும் கையேந்தக் கூடாது என்ற மனஉறுதி. இந்த நிலையோடு நடந்தான். "எனக்கு யாரும் வேலை கொடுக்கமாட்டார்கள். பதினெட்டு அகவை ஆகி விட்டால் வேலைக்குச்

செல்லலாம். அது வரை? " இப்படிப் பலவாறு எண்ணியபடி நடந்து கொண்டிருந்தான். அவன் நடந்து கொண்டிருந்த சாலையின் ஓரத்தில் மகிழுந்து ஒன்று நிறுத்தப்பட்டிருந்தது. அதன் அருகில் பெரியவர் ஒருவர் நின்றுகொண்டிருந்தார்;

பூங்குன்றான் அவர் அருகில் சென்று,

"ஐயா, உங்களைப் பார்த்தால் வசதி வாய்ந்தவர்போல் தெரிகிறது. ஏன் இங்குநின்று கொண்டிருக்கிறீர்கள்?" என்று அன்புடன் கேட்டான்.



"தம்பி, எதிர்பாராமல் கார் பழுதாகி விட்டது. கீழே இறங்கி நின்று கொண்டிருந்தேன். மோட்டார் சைக்கிளில் வந்த இரண்டு போக்கிரிகள் கத்தியைக் காட்டி மிரட்டி என் கைப் பேசி, என்னிடமிருந்த பணம் எல்லாவற்றையும் பறித்துக்கொண்டு ஓடி விட்டார்கள். வழியில் வரும் கார்களை எல்லாம் கையசைத்து நிற்கச் சொல்லிப் பார்த்தேன். யாருமே நிற்கவில்லை" " என்று சொல்லி வருந்தினார்.

"ஐயா என்னால் உங்களுக்கு ஏதும் உதவ முடியுமானால் உதவுவேன்" என்று கூறிப் பரிவுடன் அவர்முன் நின்றான்.

"தம்பி! நீ சிறுவன். உன்னால் என்ன உதவி செய்யமுடியும்? " பெரியவர் கேட்டார்.

"சிறு துரும்பும்பல்குத்த உதவும்" முடிந்ததைச் செய்வேன்." என்றான்.

“தம்பி! உன்னால் முடியுமானால் ஓர் உதவி செய்யலாம். அதோ அங்கே சற்றுத் தொலைவில் ஒரு கடைவரிசை தெரிகிறதல்லவா?”

“ஆமாம் ஐயா, நான் அவ்வப்போது பொருள் வாங்க அங்கே போவதுண்டு. எனக்கு அது பழக்கப்பட்ட இடம்தான்” என்றான்.

“அப்படியா நல்லது. அங்குள்ள ஒன்பதாம் எண் கொண்ட உணவகத்தில் என் நண்பர் இருக்கிறார். அவர்தான்அந்த கடையின்உரிமையாளர். நான் தரும் குறிப்பை அவரிடம் தரமுடியுமா? நான் என் காரை இங்கே விட்டு விட்டுச் சென்றால் தீயவர்கள் இதைத் திருடிச் சென்று விடுவார்கள்”. ” என்றார்.

“நீங்கள் காரைப் பார்த்துக் கொள்ளுங்கள் நான் நீங்கள் தரும் குறிப்பை உங்கள் நண்பரிடம் கொண்டுபோய்க் கொடுப்பேன்” என்று கூறி, அவரிடமிருந்து குறிப்பை வாங்கிக் கொண்டு ஓட்டமும் நடையுமாய் விரைந்து போய் கடைக்காரரிடம் குறிப்புச் சீட்டைக் கொடுத்தான், உடனே அவர் பூங்குன்றனுடன் கார் பழுது பார்ப்பவரையும் தன் காரில் ஏற்றிக்கொண்டு வந்து சேர்ந்தார். அந்தப் பெரியவர் பூங்குன்றனைப் பாராட்டித் தம் நண்பரிடம் ஒரு தொகையைப் பெற்றுப் பூங்குன்றனிடம் நீட்டினார்.

“ஐயா, நான் கூலியை எதிர்பார்த்து உங்களுக்கு உதவவில்லை. எனக்குப் பணம் எதுவும் வேண்டாஎன்றான்.

“என்ன தம்பி, இவ்வளவு பெரிய உதவி செய்திருக்கிறாய் நான் உனக்கு எதாவது செய்தாக வேண்டும். நீ மிகவும் களைத்துப் போயிருக்கிறாய். பசியும் உன்னை வாட்டுவது போல் தெரிகிறது. கடைக்குப் போய் உணவு உண்ணலாம் வா.” என்றார்.

“ஐயோ வேண்டாம்.ஐயா! நான் உங்களுடன் வந்து சாப்பிட்டுச் சென்றால், என் அம்மா என்னைச் சும்மா விட மாட்டார்கள்!” என்றான்.

பெரியவர் வியந்து போய் உடனே, "சரி தம்பி காரில் ஏறிக்கொள் உன்னை உன் வீட்டில் விட்டுச் செல்கிறோம்". என்றார்.

"வேண்டா ஐயா! வீடு அருகில்தான் இருக்கிறது. நான் நடந்தே செல்வேன்". என்று நடக்கத் தொடங்கினான்.

அவனால் இயல்பாக நடக்க முடியவில்லை. பெரியவர் அவனைப் பரிவோடு அணைத்துக் கொண்டு,

"தம்பி நீ மிகவும் நல்ல பையனாக இருக்கிறாய். உன் பெற்றோர் உன்னை நன்கு வளர்த்திருக்கிறார்கள். நீ யார்? உன்னைப் பற்றிக் கொஞ்சம் சொல்". என்றார்.

களைத்திருந்த நிலையில் பூங்குன்றன், "என் தந்தை ஒரு விபத்தில் இறந்துவிட்டார். என் தாய்தான் கூலிவேலை செய்து என்னைக் காப்பாற்றிப் படிக்கவைத்து வருகிறார்". என்றான்.

"கூலிவேலை என்றால் என்ன வேலை என்று தெரிந்து கொள்ளலாமா?" என்று பெரியவர் கேட்டார்.

"ஒரு சிற்றங்காடியில் அதாவது மினி மார்க்கெட்டில் எடுபிடி வேலை செய்கிறார்" என்றதும், "தம்பி உன் அம்மா பெயர் என்ன?" என்று கேட்டார். "பொன்னி" என்றான் பூங்குன்றன்.

"தம்பி! உன் அம்மா என் மினி மார்க்கெட்டில்தான் வேலை செய்கிறார். தயங்காதே நான் உங்கள் வீட்டிற்கு வர வேண்டும்" என்றார்.

"எங்கள் வீடு" என்று இழுத்த பூங்குன்றன், "அம்மா உடல்நலம் இல்லாமல் இருக்கிறார்." என்று சொல்லியபோது மிகவும் சோர்ந்து விட்டான்.

"ஓ...அதனால்தான் மூன்று நாள்களாக வேலைக்கு வரவில்லையா?" என்று கூறிப் பூங்குன்றனைக் காரில் ஏற்றிக் கொண்டு விரைந்தார். வீட்டை அடைவதற்குள் பூங்குன்றன் பசியால் மிகவும் சோர்ந்துவிட்டான். பெரியவருக்கு வீட்டைக் காட்டிய மறுநொடியே மயக்க நிலைக்குப் போய்விட்டான். அவனை அணைத்தபடியே வீட்டினுள் சென்றார் பெரியவர்.

பொன்னி மிகவும் வாடிய நிலையில் படுத்திருந்தார். பெரியவர் "பொன்னி" என்று அழைத்ததும் தட்டுத் தடுமாறி எழ முயன்றார். அந்த அம்மையார் பசியால் வாடிக்கிடந்ததைக் கண்டு துடிதுடித்துப் போனார். பெரியவரும் அவர் நண்பரும் பொன்னியையும் பூங்குன்றனையும் காரில் ஏற்றிக்கொண்டு வேகமாக உணவகத்திற்குச் சென்றார்கள். அவர்கள் இருவருக்கும் உணவளித்து உண்ணச் செய்து ஓய்வெடுக்கச் சொன்னார்கள்.

அவர்கள் உண்ட களைப்பு நீங்கியபின்.

"பொன்னி! நீ இவ்வளவு உயர்ந்த பெண்மணியா? வறுமையான சூழலிலும் உன் மகனை இவ்வளவு உயர்ந்த பிள்ளையாக வளர்த்திருக்கிறாயே! நான் உன்னைக் கண்டு பெருமைப்படுகிறேன். இனிமேல் நீ எடுபிடி வேலை செய்ய வேண்டா. மாதச் சம்பளத்தில் நல்ல வேலை செய்யலாம். முதல்

மாதச்சம்பளத்தை முன்கூட்டியே தருகிறேன்." என்று கூறி, ஒரு தொகையை நீட்டினார்.

"வேண்டா ஐயா, வேலை செய்து மாதம் முடிந்ததும் வாங்கிக்கொள்வேன்" என்றார் பொன்னி.

"நீ மறுப்பாய் என்று எனக்குத் தெரியும். இதனைப் பிச்சையாக நினைக்காத. மாதமாதம் சிறு சிறு தொகையாக உன் சம்பளத்திலிருந்து கழித்துக் கொள்வேன். பெற்றுக் கொள்". என்று தொகையைக் கையில் கொடுத்தார்.

"நீ, பசியால் வாடிக்கொண்டிருப்பது தெரிந்தும் உன் மகன் நாங்கள் கொடுத்த பணத்தை வாங்கவில்லையே ஏன்?" என்று பொன்னியை நோக்கிக் கேட்டார்.

"பூங்குன்றன், ஐயாவின் கேள்விக்கு நீயே பதில் சொல்" என்று கூறி மகனை நோக்கினார் பொன்னி.

பூங்குன்றன் சொல்லத் தொடங்கினான்.

"ஐயா, ஒருநாள் பள்ளியில் ஆசிரியர் "ஈன்றாள் பசிகாண்பான் ஆயினும் செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை" என்ற குறளைக் கற்பித்தார்" என்றான். இதன் பொருளை விளக்க முடியுமா? என்றார் பெரியவர்.

"தன்னைப் பெற்ற தாயே பசியால் வாடுவதை கண்டாலும், பெருமக்கள் இகழும்படியாக இழிசெயல் செய்து அவர் பசியைப் போக்க எண்ணக்கூடாது" என்பதாகும் என்றான் பூங்குன்றன்.

பூங்குன்றனைக் கட்டியணைத்த பெரியவர் “அருமை! அருமை! நன்றாகப்படி. நீ கற்றுஉயர்நிலை அடைய எல்லா வகையிலும் உதவுவேன்” என்றார் அப் பெரியவர். அதைக் கண்டு பொன்னி பெருமகிழ்வு கொண்டார்.

# செய்ந்நன்றி அறிதல்

**-திருமதி.தாமரை சீனிவாசராவ்**



தம்பி தங்கைகளே!

இந்த இதழில் "*செய்ந்நன்றிஅறிதல்*" என்னும் அதிகாரத்தில் இடம்பெற்றுள்ள

"தினைத்துணை நன்றி செயினும் பனைத்
துணையாக் கொள்வர் பயன்தெரிவார். " (குறள் எண்: 104)

என்னும் குறளுக்குரியவிளக்கத்தைக் காணப்போகிறோம்.

"உதவி" - "உதவி" "என்கிறார்களே! அப்படியென்றால் என்ன?

ஒருவர் துன்பப்படும்போது அந்த்த் துன்பத்திலிருந்து நீங்கும்வகையில் அவருக்கு நாம் நம்மால் இயன்ற செயல்களைச் செய்வதே "உதவி" எனப்படுகிறது.

உதவிகளில் சிறியது பெரியது என்பது ஒருபோதும் கிடையாது.

நமக்குச் சிறிதாகத் தோன்றும் உதவி, சிலருக்கு மிகப் பெரிய பயனைத் தரலாம். அதனால் பிறருக்கு நாம் செய்யும் உதவி தினை என்னும் தானியத்தைப் போல அளவில் சிறியதாக இருந்தாலும்,

அவ்வுதவியைப் பெறுபவர்கள் அதன் பயனை எண்ணிப் பார்த்து பனையளவு உயர்ந்ததாக நினைத்துப் பெற்றுக்கொள்வர்.

இதுவே இக் குறளுக்குரிய விளக்கமாகும்.



தம்பி தங்கைகளுக்கு ஒரு வேண்டுகோள்!

கொரோனா என்னும் பெருந்தொற்று நோயால் நாட்டுமக்கள் அனைவரும் பலவகைத் துன்பங்களால் வருந்துகிறார்கள்.

இந்தமாதிரி நேரத்துல நாமே ஒருத்தருக்கொருத்தர் இயன்ற உதவிகளைச் செய்துகொள்வது சிறப்பில்லையா…பாருங்கள் குழந்தைகளே , உங்களைப் போன்ற சின்னஞ்சிறுவர்கள் முதலமைச்சரின் அன்பான வேண்டுகோளுக்கு இணங்க, தான் உண்டியல்ல சேமிச்சுவைத்த பணத்தை முதலமைச்சர் நிவாரணநிதிக்கு வழங்கி இருக்கிறார்கள்..

சேலம்மாவட்டம், சாணாவூரைச் சேர்ந்த உடன்பிறப்புகள் தமிழோசை, தமிழிசை, தமிழ்திலீபன் ஆகிய மூவரும் தாங்கள் சேமித்துவைத்த உண்டியல் பணத்தைக் கொடுத்திருக்கிறார்கள். தஞ்சாவூரைச் சேர்ந்த சிறுமி ஏமாசெயசிரீ நிதி வழங்கியிருக்கிறாள், மேலும் சேலத்தைச் சேர்ந்த சிறுவன் வசியன்பிரபாகரனும் தான் மரம் நடுவதற்காக சேமித்து வைத்த காசை, இப்போது ஆக்சிசன் வாங்குவதற்கு என்று முதலமைச்சர் நிதிக்கு அனுப்பியிருக்கிறான்.

வசியன் தன்னோட அண்ணன் கவின்பூபதியோட, நிறைய விழிப்புணர்வு ஒளிப்படங்களை வலையரங்கில்(யூடியூபில்) செய்துவருகிறான். மேலும், கவின்பூபதி ‘ஆண்தேவதை‘ படத்திலும் நடிச்சிருக்காரு, விளம்பரப்படங்களிலும் நடித்துவருகிறார். இச் சகோதரர்கள் தமக்கு வரும் சிறுசேமிப்புகளை , முதியோர்இல்லம், சிறுவர் இல்லம், மரம்நடுதல் போன்ற நிகழ்வுகளுக்கு, சிறுவயதிலிருந்தே அளித்துவருகிறார்கள் என்பது ஒரு நெகிழ்ச்சியான செய்தி. இப்படி நாம் செய்யும் சிறு உதவிகளைக் கூட அரசு எவ்வளவு பெருமிதமாக ஏற்றுக்கொள்கிறார்கள் என்று பார்த்தீர்களா.

எனவே நாமும், நம்முடைய நண்பர்களையும், சுற்றத்தையும் இதுபோன்ற நல்ல காரியங்களுக்கு, தம்மால் முடிந்ததை உதவச் சொல்லலாமே. நாம் செய்கிற சிறு உதவி, பலருக்கு உதாரணமாகவும், நல்ல எடுத்துக்காட்டாகவும் அமையும்போது ,நமக்கும் மகிழ்ச்சிதானே.




கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 5
ஆனி 10, 2052 | சூன் 24, 2021
உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்

## சினம்

### -புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

சினத்தை யடக்குதல் வேண்டும், சினம்
உனக்கே கெடுதியைத் தூண்டும்!
சினத்தினை அடக்கிட முடியும்? என்று
செப்புகின்றாய் எனில் கேள் இதை நன்று!
வலிவுள்ளவன் என்று கண்டு...சினம்
வாராமலே யடக்கல் உண்டு;
வலிவிலானமேல் அன்புகொண்டு-அதை
மாற்றாதான் பெரிய மண்டு!
நலியும் மொழிகளைப் பேசவும் சொல்லும்
நாக்கையும் பல்லால் நறுக்கவும் சொல்லும்
சினத்தை அடக்குதல் வேண்டும்!
அடங்கா வெகுளிமண் மேலே, -காட்
டாறுபோய்ச் சீறுதல் போலே,
தொடர்ந்தின்னல் செய்யுமத னாலே-அதைத்
தோன்றாமலேசெய் உன்பாலே!
கடிதில் சுடுமிரும்பைத் தூக்கவும் வைக்கும்
கண்ணாடி மேசையைத் தூளாய் உடைக்கும்
சினத்தை அடக்குதல் வேண்டும்!

(இசையமுது (முதல் தொகுதி) சிறுவர் பகுதி)









*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

*இணையாசிரியர்கள் : தி.ஈழக்கதிர், திருமதி.செயசாலினி இரத்தினமேரி, திருமதி.சுபா.அருணாசலம்*

# குறள் கற்ற மாணவி

-முரசு நெடுமாறன்

---

*இந்தச்சிறுவர் கதையை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா" என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக்குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.*



---

அது ஓர் அழகான தீவு. கடற்கரையை ஒட்டி இருந்தது, அத்தீவு. வளமான சோலைகள் அங்கு இருந்தன. ஒரு சிறிய குன்றும் அத்தீவுக்குச் சிறப்புச் சேர்த்துக் கொண்டிருந்தது. இயற்கை வளம் மிக்கது அத்தீவு. மீனவர் கிராமம் ஒன்றும் அங்கு இருந்தது. பழங்குடியினர் வாழ்ந்த காடும் அங்கு அமைந்திருந்தது. சுற்றுலாப் பயணிகள் அங்கு நிரம்ப வருவர். அதனால் அங்குத் தங்கும் விடுதி பல உண்டு. சிலருக்கு அங்குச் சொந்த வீடுகளும் உள்ளன. நன்கு தமிழ்கற்ற பெரியவர் வீடு ஒன்றும் அங்கிருந்தது. அவர் அங்குள்ள தமிழ்ப்பள்ளி ஒன்றில் தலைமை ஆசிரியராய்ப் பணியாற்றி ஓய்வு பெற்றவர்.

அந்த ஆசிரியர் பெயர் இளம்வழுதி. அவரை அங்குள்ளவர்கள் "ஐயா" என்றுதான் மரியாதையுடன் அழைப்பார்கள். அவர் தம்மை நாடி வருபவர்களுக்குத் திருக்குறள் முதலிய அறநூல்களைக் கற்பிப்பார்; யாரிடமும் கட்டணம் வாங்க மாட்டார்.

அவ்வாண்டு பள்ளியின் ஆண்டு இறுதி விடுமுறை தொடங்கியது. ஒரு மாதத்திற்கு மேற்பட்ட விடுமுறை ஆதலால் பலரும் அங்கு விடுமுறையைக் கழிக்க வந்தனர். அவர்களுள் ஒருவர் நல்லசிவம். அவர் பெரும் பணக்காரர். அவர் தம் மனைவி பொற்கொடியுடனும் மூன்று பிள்ளைகளுடனும் இம்முறை அந்தத் தீவுக்கு வந்திருந்தார். ஒருமாதம் அங்குத் தங்கி ஓய்வெடுக்கத் திட்டமிட்டிருந்தார்.

அவருக்கு மூன்று பிள்ளைகள்; இருவர் ஆண்கள்; கடைசிப் பிள்ளை பெண்குழந்தை. அவள் ஐந்தாம் வகுப்புக் கற்று வந்தாள். நல்லசிவத்தின்

மனைவி நன்கு தமிழ் கற்றவர்; தமிழ்ப்பற்று மிக்கவர் ஆதலால், கடைசிப் பிள்ளை பூங்கொடியைத் தமிழ்ப்பள்ளியில் சேர்த்தார்.

பூங்கொடி சுறுசுறுப்பான மாணவி. படிப்பில் மிகவும் கெட்டிக்காரி. அவளுக்குத் திருக்குறள் கற்பதில் ஆர்வம் மிகுதி.. அதை ஆழமாகக் கற்கவேண்டுமென்பது அவள் எண்ணம். அத்தீவிற்கு வந்த ஓரிரு நாள்களில் அங்குத் தமிழ் ஆசிரியர் ஒருவர் இருப்பதைத் தெரிந்து கொண்டாள். அவரிடம் சென்று திருக்குறள் பாடம் கேட்க வேண்டுமென்று விரும்பினாள்; தன் விருப்பத்தைப் பெற்றோரிடம் கூறினாள். "விடுமுறையைக் கழிக்கத்தானே இங்கு வந்தோம்; திருக்குறளை எல்லாம் பிறகு படித்துக் கொள்ளலாம். இங்கு எல்லா இடங்களையும் சுற்றிப் பார்க்கலாம்; கடலில் குளிக்கலாம்;சுவையான உணவுகளைச் சமைத்து உண்ணலாம்; எல்லாவற்றையும் மறந்து அரட்டை அளிப்பதில் பொழுதைக் கழிக்கலாம்" என்றார் நல்லசிவம்.

நீங்கள் சொன்னபடியெல்லாம் நடக்கலாம். அதனொடு பூங்கொடி திருக்குறள் படிக்கவும் சிறிது நேரம் ஒதுக்கலாம் என்று பொற்கொடி கூறினார். நல்லசிவம் சரியென்று ஒப்புக் கொண்டார். அந்த ஆசிரியரை இங்கேயே வந்து சொல்லிக் கொடுக்கச் சொல்லலாம்;வேண்டிய சம்பளம் தந்துவிடலாம்" என்றார்.

மறுநாளே தம் கார் டிரைவரை ஆசிரியர் வீட்டிற்கு அனுப்பி அவரை விடுதிக்கு வந்து மகளுக்குத் தமிழ் கற்பிக்க முடியுமா என்று கேட்டுவரச் சொன்னார். ஓட்டுநர் ஆசிரியர் இல்லம் சென்றார்.

ஆசிரியர் வீடு எளிமையான வீடாக இருந்தது. அதன் சுற்றுச் சூழல் இயற்கை அழகு நிரம்பியதாக இருந்தது. தம் வீட்டின் முன் யாரோ ஒருவர் நிற்பதைக் கண்ட ஆசிரியர் வெளியில் வந்தார்.

வேட்டி, சட்டை அணிந்த எளிமையான தோற்றம் கொண்ட ஆசிரியரைக் கண்டதும் ஓட்டுநர் அவருக்குப் பணிவுடன் வணக்கம் கூறினார்; அவரிடம் தன் முதலாளி சொல்லியனுப்பியதைக் கூறினார்; வேண்டிய சம்பளமும் தருவார் என்றும் சொன்னார். ஓட்டுநர் சொன்னதைக் கேட்ட ஆசிரியர்,

"நான் வெளியிடங்களுக்குச் சென்று பாடம் சொல்லிக் கொடுப்பதில்லை. என் வீட்டிற்கு வருபவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பேன். சம்பளம்வாங்கும் வழக்கமும் இல்லாதவன் நான். படிக்க விரும்புவோர் இங்குவந்து படித்துக் கொள்ளலாம்" என்றார்.

ஓட்டுநர் ஆசிரியர் கூறியதை நல்லசிவத்திடம் கூறினார். "நம் பிள்ளை அவர் வீட்டிற்குச் செல்ல வேண்டுமா? இதுவரை நம் பிள்ளைகள் வீட்டுக்கு

வெளியே சென்று யாரிடமும் படித்ததில்லை. தனிப்பாடம் படித்துத்தரும் எல்லாரும் நம்வீட்டிற்கு வந்து தானே சொல்லிக் கொடுக்கிறார்கள்" என்று சற்று ஆத்திரத்துடன் கூறினார்.

"எல்லாரும் ஒரே மாதிரி இருக்கமாட்டார்கள். இவர் பெரியவர். நிறைய கற்ற ஆசிரியர். அவர் இங்கு வரவேண்டுமென்று எதிர்பார்ப்பது தவறு. திருக்குறள் படிக்கப் பூங்கொடியை அவர் வீட்டுக்கு அனுப்புவது தப்பில்லை" என்றார் பொற்கொடி. நல்லசிவமும் அதனை ஒப்புக்கொண்டார்.

மறுநாள் ஓட்டுநருடன் புறப்பட்டுச் சென்று பெரியவர் வீட்டுவாசலில் பூங்கொடி இறங்கினாள். ஓட்டுநர் பூங்கொடியை ஆசிரியருக்கு அறிமுகப் படுத்தினார். 'குரு தட்சணை' என்னும் முறையில் ஒரு தட்டில் பழங்கள், வெற்றிலை, பாக்கு இரண்டாயிரம் ரூபாய் வைத்துப் பெரியவரிடம் நீட்டினான் டிரைவர்.

பூங்கொடியை மலர்ந்த முகத்துடன் வரவேற்று அமரச் செய்தார் பெரியவர். ஓட்டுநரைப் பார்த்து, "நான் எதையும் வாங்கும் பழக்கம் இல்லாதவன். இதனைத் திருப்பி எடுத்துச் செல்லுங்கள்" என்று சொல்லிவிட்டு, பூங்கொடியை வீட்டினுள் அழைத்துச் சென்றார்; அவளுக்குப் பழச்சாறு கொடுத்துப் பாடத்தைத் தொடங்கினார். முதலில் அவள் பின்னணி பற்றிக் கேட்டார்.

பூங்கொடி சுருக்கமாகத் தன் பின்னணி பற்றிக் கூறிவிட்டு,"நான் தமிழ்ப்பள்ளியில் படிக்கிறேன்;திருக்குறள் படிப்பதென்றால் எனக்கு மிகவும் பிடிக்கும்" என்றாள். பூங்கொடியின் கனிவான பேச்சையும், திருக்குறள் படிக்க விரும்பும் அவள் ஆர்வத்தையும் பாராட்டிய ஆசிரியர், வழக்கம்போல் திருக்குறள் பற்றிய ஓர் இனிய பாடலோடு பாடத்தைத் தொடங்கினார்;திருக்குறளின் சிறப்புகளை இனிய முறையில் எடுத்துரைத்தார்.

பாடம் தொடர்ந்து நடந்து கொண்டிருந்தது. அவர் தாயும் தந்தையும் மகள் திருக்குறளை ஆர்வத்தோடு படித்துவருவது கண்டு மகிழ்ந்தனர். அன்று பாடம் தொடங்கியபோதுபூங்கொடி, "ஐயா, நீங்கள் நேற்று கற்பித்த திருக்குறளின் பொருள் சரியாய்ப் புரியவில்லை. மீண்டும் விளக்குங்கள் என்றாள்... "சொல்கிறேன். எங்கே அந்தக் குறளைக் கூறு" என்றார் ஆசிரியர்.

"உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லாதவர்" (395)

என்ற அக்குறளைக் கூறினாள் பூங்கொடி.

"இது கல்வியைப் பற்றிய அருமையான குறள். கற்கும் மாணவர் ஆசிரியரை எப்படி அணுகிக் கற்க வேண்டுமென்பதை விளக்குகிறார் திருவள்ளுவர். ஒரு பணக்காரரிடம் கையில் ஒன்றும் இல்லா ஏழை பணிந்துபோய் உதவி பெறுவது போல, மாணவர் ஆசிரியரைப் பணிந்து அவரிடம் கற்றுக்கொள்ள வேண்டும். அங்ஙனம் கல்வி கற்பவரே தலைமையானவர். ஆசிரியரை மதிக்காமல், அவர் சொல்வதைக் கருத்தோடு கேட்காதவர், கடைப்பட்டவர் ஆவர்." என்று ஆசிரியர் விளக்கம் கூறினார்.

"ஐயா, இப்பொழுது இக்குறள் நன்றாக விளங்குகிறது. ஒவ்வொரு மாணவரும் படித்துப் புரிந்துகொள்ள வேண்டிய குறள் இது. தாங்கள் கூறிய விளக்கத்தை மனத்தில் பதிய வைத்துக் கொள்வேன். என் நண்பர்களுக்கும் கூறுவேன், என்று சொல்லிவிட்டு கவலை தோய்ந்த முகத்துடன் ஆசிரியரைப் பார்த்தாள்.

"என்ன பூங்கொடி, ஏன் உன் முகம் வாட்டமாக இருக்கிறது?" என்றார்.

"ஐயா, நாளையோடு எங்கள் சுற்றுப் பயணம் முடிகிறது. இனி உங்களிடம் பாடம் கேட்க முடியாதே" என்று கவலையாக இருக்கிறது" என்றாள்.

"இதற்காகவா வருந்துகிறாய்? வீட்டில் சொந்தமாகப் படிக்கலாம். என்னுடன் கைப்பேசியில் பேசி விளக்கம் பெறலாம்."

"ஐயா, இனி விடுமுறைக் காலங்களில் பெற்றோருடன் இங்கு வருவேன்." உங்களிடம் தொடர்ந்து கற்பேன்" என்றாள்.

"உன் ஆர்வத்தைப் பாராட்டுகிறேன். முயற்சி திருவினையாக்கும். மகிழ்ச்சியோடு சென்றுவா" என்று பெரியவர் பூங்கொடிக்கு விடை கொடுத்தார்.

அத்தீவிலிருந்து வீடு திரும்புவதற்குமுன் பெற்றோருடன் ஆசிரியர் இல்லம் சென்று அவருக்கு நன்றி கூறினாள்; பெற்றோரும் அவருக்கு நன்றி கூறி மகிழ்ச்சியுடன் விடைபெற்றனர்.

# கதிரும் செந்திலும்

**-திருமதி.தாமரை சீனிவாசராவ்**



கதிரும் செந்திலும் பள்ளிப் பருவம் முதல் ஒருவரை ஒருவர் அறிந்த நண்பர்கள். அவர்களின் இருவர் வீடுகளும் பசுமைமாறாத ,இயற்கையோடு இயைந்து வாழும் இயற்கைவேளாண்மை செய்யும் குடும்பத்தினர். தங்கள் பெற்றோருடன் பள்ளிநேரம் தவிர்த்து, பலஉதவிகளையும்செய்வர். பல குடும்பங்கள் சொந்த மண்ணை விட்டு வெளியூர் சென்றாலும், இந்த இரு குடும்பத்தினரும் ஒருவருக்கொருவர் பூமித்தாயின்மீது நம்பிக்கை கொண்டு வேளாண்மை செய்துகொண்டு இருந்தனர். கதிருக்கும், செந்திலுக்கும் தம்மிடம் இருக்கும் ஆட்டுக் குட்டிகளையும், இளங்கன்றுகளையும் பராமரிப்பதில் அவ்வளவு மகிழ்ச்சி.

இந்த வேளையில் வெளிநாட்டில் இருந்துவந்த கதிரின் சித்தப்பா, தொழிற்சாலை அமைக்கும் ஆர்வத்தில், விளைநிலங்களை மாற்ற எண்ணி தம் குடும்பத்தாருடன் கலந்து ஆலோசித்தார். ஆனாலும் அரைமனத்துடன் ஒத்துக்கொண்ட கதிரின் அப்பா குழப்பத்திலேயேஇருந்தார்.

செந்திலின் அப்பாவிடமும் இதுபற்றிப் பேசி, தொழிற் சாலைப்பங்காளராக நீயும் வருகிறாயா எனக் கேட்டார். அப்போது செந்தில் குறுக்கிட்டு "வேண்டாம் மாமா, இந்தத் தொழிற்சாலையிலிருந்து வரும் கழிவுகள் எவ்வளவு சேதத்தை ஏற்படுத்தும்னு ஆசிரியர் நிறையவே சொல்லியிருக்காரு. இதனால காற்று, மண் எல்லாமே மாசுபடும். அப்பா இதுக்கு சம்மதிக்காதீங்க " என்று தன் அப்பாவிடம் மன்றாடினான்.

சரி,சரி என்று அவனைச் சமாதானப்படுத்தி, 'தனக்கு விருப்பமில்லை ' என்று கூறி யோசித்துச்செய்யப்பா என்று அவர் நினைத்ததையும் நண்பருக்குக் கூறினார். தொழிற்சாலை தொடங்கும் அயல்நாட்டுநிறுவனம் வந்து இறங்கி வேலைகளைத் தொடங்கியது. மண்ணைப்பணமாக்குகிறோம் என்று ஆசைவார்த்தை கூறி, பணிகள் தொடங்கிய வேளையில், பயிர்கள் அனைத்தும் அழிக்கப்பட்டுக் குழிகள் எடுப்பதைக் கண்டு கதிர் கலங்கித்தான் போனான். தாங்கள் ஏறி விளையாடிய மரங்களும் மண்ணோடு வெட்டுப்பட்டு விழும்போது நொந்தேபோனான்.

பிறகு தொழிற்சாலை தொடங்கப்பட்டு வேலைகள் நடைபெறத்துவங்கியது. நீரின் சுவையைத் தனக்குள்ளே வைத்து இளநீரைத் தரும் தென்னைமரம், தனது சுவையில் மாற்றத்தைக் காட்டியது. பிறகு சுற்றியிருந்த கிணறுகள் சற்றே வற்றத் தொடங்கின. திடீரென ஒருநாள்

ஆற்றில் மிதந்த இறந்த மீன்களைக் கண்டு அனைவரும் அதிர்ச்சியடையடந்தனர். அந்தநீரைக் குடித்த ஆடு,மாடுகளும் பாதிக்கப்படாமல் இல்லை. இப்படியே சென்றுகொண்டிருக்கையில், எஞ்சியிருந்த சில பேர் அரசாங்கத்தை அணுகி, சூழலியல் போராட்டக்காரர்களோடு, தொழிற்சாலையை ஆய்வுசெய்யவேண்டும் எனப்போராட... பெரும்பிரச்சனைகளுக்கு உள்ளாகித் தொழிற்சாலை மூடும் அளவிற்கு வந்துவிட்டது. என்ன செய்வதென்று தெரியாமல், ஆற்றில் ஒருகால், சேற்றில் ஒருகால் என்பது போன்ற கதையாகி, தொழிற்சாலையும் மூடிவிட்டு, மலடாய்ப் போன மண்ணிற்குப் பக்கத்தில் அமர்ந்து கண்ணீர்விட நேர்ந்தது. கதிரின் அப்பாவிற்கு ஆறுதல் கூறிய செந்திலின் அப்பாவோ, சிறிது தவறியிருந்தாலும் என்ன ஆகியிருக்கும் என்று தனக்கு அறிவுறுத்திய தன் மகனைப் பற்றி பெருமைப்பட்டுக்கொண்டார். எனவே நாம் செய்யும் செயல்களின் பயனை முன்கூட்டியே அறிந்து அறிவுடையவர்களாகச் செயல்படுவோம்.

"எதிரதாக்காக்கும்அறிவினார்க்கில்லை
அதிரவருவதோர்நோய்" (குறள் :429) அதிகாரம்: அறிவுடைமை

விளக்கம்: வருவதை முன்கூட்டியே அறிந்து செயல்படும் அறிவுடையோர்க்குத் துன்பம் வந்தாலும் அது நடுங்கும்படியானதாக இருக்காது.



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 6
ஆடி 8, 2052 | சூலை 24, 2021
**உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால்** வெளியிடப்படும் இலவச இணைய இதழ்


## தமிழியக்கம் – மாணவர்

-புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்

தமிழ்நாட்டின் கண்ணொப்பீர்
கனியி ருக்க
நிற்கின்ற நெடுமரத்தில்
காய்வர நினையாதீர்
மூதுணர்வால்
முற்கண்ட எவற்றினுக்கும்
முதலான நந்தமிழை
இகழ்த லின்றிக்
கற்கண்டாய் நினைத்தின்பம்
கைக்கொண்டு வாழ்ந்திடுவீர்
நன்றே என்றும்
ஆங்கிலத்தைக் கற்கையிலும்
அயல்மொழியைக் கற்கையிலும்
எந்த நாளும்
தீங்கனியைச் செந்தமிழைத்
தென்னாட்டின் பொன்னேட்டை
உயிராய்க் கொள்வீர்
ஏங்கவைக்கும் வடமொழியை,
இந்தியினை எதிர்த்திடுவீர்
அஞ்ச வேண்டாம்.
தீங்குடைய பார்ப்பனரின்
ஆயுதங்கள் "இந்தி" "வட
சொல்" இரண்டும்
பார்ப்பான் பால் படியாதீர்;
சொற்குக்கீழ்ப் படியாதீர்
உம்மை ஏய்க்கப்
பார்ப்பான்; தீ துறப்பார்ப்பான்
கெடுத்துவிடப் பார்ப்பான் எப்
போதும் பார்ப்பான்
ஆர்ப்பான் நம் நன்மையிலே
ஆர்வமிக உள்ளவன் போல்!
நம்பவேண்டாம்.
பார்பானின் கையை எதிர்
பார்ப்பானையே பார்ப்பான்
தின்னப் பார்ப்பான்
தமிழின்பேர் சொல்லி மிகு
தமிழரிடைத் தமிழ் நாட்டில்
வாழ்ந்திட் டாலும்
தமிழழித்துத் தமிழர் தம்மை
தலை தூக்கா தழித்துவிட
நினைப்பான் பார்ப்பான்
அமுதாகப் பேசிடுவான்
அத்தனையும் நஞ்சென்க
நம்ப வேண்டாம்
தமிழர்கடன் பார்ப்பானைத்
தரைமட்டம் ஆக்குவதே
என்று ணர்வீர்.
தமிழரின்சீர் தனைக்குறைத்துத்
தனியொருசொல் சொன்னாலும்
பார்ப்பான் தன்னை
உமிழ்ந்திடுக மானத்தை
ஒரு சிறிதும் இழக்காதீர்
தமிழைக் காக்க
இமையளவும் சோம்பின்றி
எவனுக்கும் அஞ்சாது
தொண்டு செய்வீர்
சுமை உங்கள் தலைமீதில்
துயர்போக்கல் உங்கள் கடன்!
தூய்தின் வாழ்க!

*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

# அன்பு வழி

-முரசு நெடுமாறன்

*இந்தச்சிறுவர் கதையை இயற்றி வழங்கியவர் "மலேசியாவின் அழ.வள்ளியப்பா" என்று பாராட்டப்படும் மலேசியப் பாவலர் முரசு நெடுமாறன் ஆவார்.மலேசியத் தொலைக்காட்சியிலும் வானொலியிலும் ஆயிரக்கணக்காகக்குழந்தைப் பாடல்களும் நாடகங்களும் படைத்து வழங்கிய வரலாற்றுச்சாதனையாளர் இவரே.. "மலேசியக் கவிதைக்களஞ்சியம் என்னும் இவரது தொகுப்பு நூல் மலேசியாவில் இருநூறாண்டுகளாக வளர்ந்துவரும் தமிழ்க்கவிதையின் வரலாற்றைக் கூறுவது. தமது கவிதைப் பணிக்காகத் தமிழக அரசால் பாரதிதாசன் விருது வழங்கிச் சிறப்பிக்கப்பட்ட முதல் அயல்நாட்டவர்.*



மாலை ஆறுமணி இருக்கும். சிறுவன் ஒருவன் சோர்வுடன் நடந்து வந்துகொண்டிருந்தான். பசி அவனை வாட்டிக்கொண்டிருந்தது. சற்றே நின்று நிமிர்ந்து பார்த்தான் 'திறன் பயிற்சி மையம்' என்று ஒரு பெயர்ப்பலகை கண்ணில் தெரிந்தது. அந்தப் பலகை பொருத்தப்பட்டிருந்த தூணில் சாய்ந்து நின்றுகொண்டிருந்தான். முதல்நாள் இரவு அவன் சரியாகச் சாப்பிடவில்லை; காலையிலும் பசியாறவில்லை; பகல் உணவும் உண்ணவில்லை. அதனால் பசி அவனை வாட்டிக் கொண்டிருந்தது. அப்பொழுது ஒருகார் அந்த மையத்தினுள் நுழைந்தது. காரில் வந்தவர் தூணில் சாய்ந்து கொண்டிருந்தவனைக் கண்டதும் காரை நிறுத்தினார்; கீழே இறங்கி அந்தப் பையனை இரக்கத்தோடு பார்த்தார்.

"தம்பி! ஏன் இங்கே நிற்கிறாய்?" என்று அன்புடன் கேட்டார். பையன் பேசவில்லை. அவன் தோற்றத்தைக் கண்டு அவன் பசியால் வாடிக்கொண்டிருப்பதை உணர்ந்தார். "என்ன பசியா?" என்றார். ஆம் என்பதுபோல் அவன் இலேசாகத் தலையை ஆட்டினான். அவனைத் தம்காரில் ஏற்றிக்கொண்டு திறன் பயிற்சி மையத்தின் உள்ளே சென்றார். அங்குள்ள உதவியாளரை அழைத்துப் பையனுக்கு உணவளிக்குமாறு அனுப்பிவிட்டுத் தம் அறைக்குச் சென்றார்.

அவர் அந்தத் திறன் பயிற்சி மையத்தின் தலைவர். அன்பு நிறைந்தவர். பொதுநலத் தொண்டில் நாட்டம் கொண்டவர். குறிப்பாகக் கல்வியைப் பாதியில் கைவிடும் மாணவர்களை வாழவைக்க வழிசெய்து கொண்டிருப்பவர். கற்பதில் தோல்வி கண்ட, சூழ்நிலைகளால் பின் தங்கிவிட்ட மாணவர்களைத் தம் மையத்தில் சேர்த்துக் கொள்வார். தோல்விக்கான காரணங்களைக் கண்டு பிடித்து, அவர்கள் வெற்றிபெற்று உயரப் பயிற்சி அளிப்பார். அவர்களுக்குக்

கலை, இலக்கிய உணர்வுகளும் ஏற்பட்டு, அவர்கள் மனத்தில் பசுமைசுரக்க வழி வகுப்பவர். இவை அனைத்தையும் இலவசமாகவே செய்து வரும் பெரியவர். நல்ல மனம் கொண்டவர்கள் இதற்குத் துணைபுரிந்து வருகின்றனர்.

பையனை உணவு உண்ண அனுப்பிய அப்பெரியவர், அவனை அழைத்து வருமாறு உதவியாளரிடம் கூறினார். உதவியாளர் அவனை அழைத்து வந்தார். அவன் அவர் முன் கூனிக்குறுகிநின்று, "நன்றி ஐயா" என்று கனிவுடன் கூறினான். அவனைப் பரிவுடன் ஏற இரங்கப் பார்த்த பெரியவர் அவன் நிலையை அறிய அவனிடம் விரிவாக விசாரித்தார். அவன் நடந்தவற்றை எல்லாம் மனந்திறந்து சொல்லத் தொடங்கினான்.

"ஐயா, என்பெயர் செல்லமுத்து. நான் தமிழ்ப்பள்ளியில் ஆறாம் வகுப்புப் படித்துக்கொண்டிருக்கிறேன். என் அப்பா, அம்மா இருவரும் மிகமிகக் கண்டிப்பானவர்கள். பள்ளிக்கு என்னைக் காரில் அழைத்துச் செல்வார்கள், பள்ளி முடிந்ததும் வீட்டிற்குக் கூட்டி வந்துவிடுவார்கள். நான் வெளியில் எங்கும் செல்ல முடியாது. மற்றவர்களோடு பழகினால் கெட்டுப் போய்விடுவேன் என்று நினைப்பார்கள்.

"வீட்டில் தொலைக்காட்சி பார்க்க விடமாட்டார்கள். எந்த நேரமும் படிபடி என்று நச்சரித்துக் கொண்டே இருப்பார்கள். என் பாட்டி மட்டும் என்னிடம் அன்புடன் பழகுவார்.

"நான் எல்லாப் பாடங்களிலும் 'A' தகுதி பெறவேண்டும்; பாராட்டும் பரிசுகளும் பெறவேண்டும் என்பதிலேயே என் பெற்றோர் நோக்கமாக இருப்பார்கள். எங்களுக்கு எல்லா வசதிகளும் உள்ளன என்றாலும், நான்ஓர் அடிமை போல நடத்தப்பட்டேன்.

"பள்ளியில் ஆறாம் வகுப்புத் தேர்வுமுடிவுகள் வந்தன. நான் பெற்றோர் எதிர்ப்பார்த்தபடி எல்லாப் பாடங்களிலும் 'A' பெறவில்லை. இரண்டு பாடங்களில் 'B' தகுதியே பெற்றேன். தேர்வு முடிவுகள்பெறப் பள்ளிக்குவந்த என் அன்னை, என்னைக் கடுமையாகச் சீறினார். "மானத்தை வாங்கிவிட்டாயே, எவ்வளவு செலவு செய்து படிக்க வைத்தோம். நீ எல்லாப் பாடங்களிலும் 'A'பெறுவாய் என்று சவால் விட்டோம். இப்படிச் செய்து விட்டாயே. உன் அப்பா இதைப் பார்த்தால் உன்னை என்ன செய்வாரோ தெரியாது" என்று திட்டிக் கொண்டே வீட்டிற்கு அழைத்து வந்தார்.

"போய் வயிற்றுக்குக் கொட்டிக்கோ" என்று கூறிவிட்டு காரில் வெளியே சென்று விட்டார். பாட்டி வந்து என்னை அன்போடு தழுவிக் கொண்டு "வா கண்ணு வந்து சாப்பிடு" என்று மிகவும் கனிவுடன் கூறினார். எனக்குச் சாப்பிட மனம் வரவில்லை. பசியும் எங்கோ ஓடிவிட்டது.

"தந்தை கண்டிப்பாக என்னைஅடித்து நொறுக்கிவிடுவார் என்று அஞ்சினேன். என் உடம்பு நடுங்கியது. உடனே வீட்டின் பின்கதவு வழியாக வெளியேறி விட்டேன். எங்கு எங்கோ சுற்றினேன். எனக்கு உற்ற நண்பர்கள் இல்லை. உறவினர் வீட்டிற்கும் செல்ல மனமில்லை. அவர்கள் என்னை என் தந்தையிடம் ஒப்படைத்து விடுவார்கள் என்று பயந்தேன். தொடர்ந்து மனம்போன போக்கில் நடந்துகொண்டிருந்தேன்; எப்படியோ இங்குவந்து சேர்ந்தேன்" என்றான். அவன் கண்கள் கலங்கின. எதையோ இழந்தவன்போல் காணப்பட்டான்.

"தம்பி கவலைப்படாதே. உனக்குநான் நல்லது செய்வேன். முதலில் உன்னை உன் வீட்டிற்கு அனுப்பி வைக்கிறேன்" என்றார் சிவமணி.

"ஐயோ! வேண்டாம் ஐயா. என் அப்பா என்னை அடித்துக் கொன்றாலும் கொன்று விடுவார்" என்று பதறினான்.

"பயப்படாதே! நான் உனக்கு எதுவும் நேராமல் பார்த்துக் கொள்வேன். இன்று இரவு நீ இங்கே தங்கலாம். மற்ற ஏற்பாடுகளை நான் செய்வேன்" என்று கூறி அவன் பெற்றோர் பெயர், வீட்டு முகவரி, தொலைபேசி எண் ஆகியவற்றை பெரியவர் பெற்றுக்கொண்டு அவனை விடுதிக்கு அனுப்பினார்.

உடனே செல்லமுத்துவின் தந்தையைத் தொலைபேசியில் அழைத்தார்; திறன் பயிற்சி மையத்திற்கு வரச்சொன்னார். சிறிது நேரத்தில் அவர்தன் மனைவியுடன் அங்கு வந்து சேர்ந்தார்.

"வாங்க பழனியப்பன்" என்று அவரையும் அவர் மனைவியையும் அன்புடன் வரவேற்றார். அவர்களை இருக்கையில் உட்காரச் சொன்னார்.

"ஐயா எங்கள் மகன்"...என்று இருவரும் கண்கலங்கினர்; உடனே பார்க்க வேண்டுமென்று துடித்தனர்.

"பதறாதீர்கள் உங்கள் மகனை உங்களுடன் அனுப்புவேன். அதற்கு முன் உங்களிடம் கொஞ்சம் பேசவேண்டும்" என்றார்.

"சரி ஐயா". என்று கூறினர். "திரு.பழனியப்பன் உங்கள் மகன் மூலம் நான் பல செய்திகளை அறிந்தேன். உங்கள் மகனை நீங்கள் மிகச்சிறந்த அறிவாளியாக வளர்க்க எண்ணுகிறீர்கள். உங்கள் மனைவியும் அப்படியே. அது நல்ல எண்ணம்தான். ஆனால் உங்கள் மகனைக் கசக்கிப் பிழிந்திருக்கிறீர்கள். அவனை ஓர் அடிமைப்போல் நடத்தி இருக்கிறீர்கள்.

"மனித வாழ்வு என்பது அன்பின் அடிப்படையில் இயங்குவது. உங்கள் மகன்மேல் நீங்கள் போதிய அன்பு காட்டியதாகத் தெரியவில்லை. உங்கள்

மகன் படித்துப் பணம் சம்பாதிக்கும் ஓர் இயந்திரமாக ஆனால் போதுமென்று நினைக்கிறீர்கள். அவன் மனிதநேயம் கொண்டவனாக வளர வேண்டுமென்று நீங்கள் நினைப்பதாகத் தெரியவில்லை. அவன் தேர்வில் எல்லாப்பாடங்களிலும் 'A' பெறவில்லை அதனால் அவனைத் துன்புறுத்துவீர்கள் என்று பயந்தான். அவன் வீட்டை விட்டு வெளியேற நேர்ந்தது.இங்கு ஒரு திருக்குறளை நினைவூட்ட விரும்பிகிறேன்.

அன்பகத்து இல்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றல் மரம்தளிர்த் தற்று (78)

மனத்திலே அன்பு இல்லாத வாழ்வானது, பாலைவனத்தில் பட்டுப்போன மரம் தளிர்விட்டுத் தழைப்பது போன்றது போல் ஆகும். பாலை நிலத்தில் எப்படிச் செடி முளைக்கும். நீங்கள் அவனிடம் சரியாக அன்பு காட்டவில்லை. நீங்கள் எல்லாரையும் தீயவர்கள் என்றே எண்ணியுள்ளீர்கள். உங்கள் மகனுடன் பழக யாருக்கும் தகுதி இல்லை என்பது உங்கள் எண்ணமாக இருக்கிறது.

"கண்டிப்பும் தேவைதான். இடித்து உரைக்க வேண்டும் என்பதையும் நான் மறுக்கவில்லை. எல்லாம் அன்பு வழியில் நடக்க வேண்டும்" என்றார் பெரியவர் சிவமணி. நான் ஓர் ஏழ்மையான குடும்பத்தில் பிரந்தவன்; தேர்வில் உயர்ந்த புள்ளிகள் பெறவில்லை. என் பெற்றோர் என்னை ஒரு தொழில் நுட்பம் பள்ளியில் சேர்த்தார்கள். அதில் நல்ல பயிற்சி பெற்றேன். ஒரு தொழிலை ஏற்றேன். நான் மேலும் உயரவேண்டுமென்று உறுதி எடுத்தேன். என்போன்றவர்கள் தொடர்ந்து படித்துத் தொழில் அதிபர்கள் ஆக்வேண்டுமென்று எண்ணினேன். அந்தக் கனவால் உருவானதுதான் இந்த நிலையம். இதில் ஆயிரக்கணக்கானவர் கற்று உயர்ந்திருக்கிறார்கள்.

"எங்கள் தவறு எங்களுக்குப் புரிந்தது ஐயா. இனிமேல் அவனை அன்பு வழியில் நடத்துவோம் டாக்டர். எங்கள் மகனை நாங்கள் அழைத்துச் செல்லலாமா"? என்றார் பழனியப்பன்."இப்பொழுது அழைத்துச் செல்வது நல்லதன்று. நீங்கள் விரும்பினால் அவன் இங்குச் சிலநாள்கள் தங்கட்டும். இங்குள்ளவர்களோடு அன்பு கலந்து பழகட்டும். வெளிஉலகையும் புரிந்து கொள்ளட்டும். அவன் மனத்தில் உறுதி வளரட்டும்; தெளிவு வரட்டும். உங்கள் மேல் நம்பிக்கை பிறக்கட்டும். அதன் பின் அழைத்துச் செல்வதே நல்லது" என்றார் பெரியவர் சிவமணி.

அப்படியே ஆகட்டும் பெரியவர். நாங்கள் உங்கள் அழைப்புக்குக் காத்துக் கிடப்போம் என்றார்கள். கவலைப் படாதீர்கள். கூடிய விரைவில் அழைப்பேன். வரும்போது அவன் பாட்டியையும் அழைத்து வாருங்கள்" என்றார் சிவமணி. தங்கள் பிள்ளை கிடைத்து விட்டான். என்ற மகிழ்ச்சியோடு அவர்கள் விடைபெற்றனர்.

# ஆள்வினையுடைமை

**-திருமதி.தாமரை சீனிவாசராவ்**



எந்த ஒரு செயலையும் நம்மால் செய்ய இயலும் என்ற நம்பிக்கை வேண்டும் . இதைச் செய்ய முடியுமா,நம்மால்இயலுமா என்று ஒருபோதும் நம்மிடையேதளர்வு வந்துவிடக்கூடாது. நம்பிக்கையும் முயற்சியும் இருந்தாலே மிகப்பெரிய செயல்களையும் நாம் வென்று எடுக்க முடியும். நம்மால் செய்ய இயலாத காரியங்கள் ஒன்றுமே இல்லை என்று முடிவெடுத்து விட்டால் எவ்வளவு பெரியகாரியமானாலும் அதை செய்யமுடியும். தகுதியும், திறமையும் நமக்குள்ளே வைத்துக்கொண்டு அதை வெளிப்படுத்தாமலோ, முயற்சிசெய்யாமலோ இருந்தால் யாருக்கும் பயனில்லை. வலிமையான எண்ணங்களை மனதிற்திடமாக பதித்துக்கொண்டால் இந்த உலகில் நம்மால் சாதிக்க முடியாதது எதுவுமே இல்லை என்றாகிவிடும். அதைத்தான் மகாகவி பாரதியாரும், "உறுதி கொண்ட நெஞ்சினாய் வா,வா,வா", வலிமைக் கொண்ட தோளினாய் வா,வா,வா" என்று ஒவ்வொருவரையும் எழுச்சியூட்டுகிறார். அப்படிப்பட்ட வலிமையான எண்ணங்களே நாம் வெற்றிநடைப் போட ஏதுவாய் அமையும் என்பதில் ஐயமில்லை.




புதுக்கோட்டை மாவட்டம் கத்தக்குறிச்சியைச் சேர்ந்த சாந்தி அவர்கள் ஒருதடகள வீராங்கனை. தம்முடைய வறுமையான சூழ்நிலையிலும் படிப்பு, விளையாட்டு என இரண்டிலும் சாதித்துக்கொண்டு இருந்தார். பெற்றோருடன் செங்கல் சூளையிலெல்லாம் வேலைசெய்து அவர்களோடு வாழ்க்கைப் போராட்டத்தை நடத்தினார். கடினமான தம்முடைய சூழ்நிலையைப் பொருட்படுத்தாமல், விளையாட்டின் மீது கொண்ட ஆர்வத்தால், விடாமல் பயிற்சி பெற்று போட்டிகளில் கலந்துகொண்டு சர்வதேச அளவில் 11 பதக்கம், தேசிய அளவில் 50 பதக்கம் என வாங்கிக் குவித்தார். 2006 ஆம் ஆண்டு கத்தாரில் நடைப்பெற்ற போட்டியில் 800 மீட்டர் ஓட்டப் பந்தயத்தில் வெள்ளிப் பதக்கத்தை வென்று ஆசிய விளையாட்டுப் போட்டிகளில் வென்ற முதல் தமிழ்ப்பெண் என்று பெருமைசேர்த்தார்.

ஆனாலும் மிகவும் குறைந்த நேரத்தில் அவர்கள் வென்றதற்காக பாலின பரிசோதனை செய்யப்பட்டு ,மிகவும் அவமானத்திற்கு உள்ளாக்கப்பட்டு ,அவருடைய பதக்கத்தையும் திரும்பபெற்று, அவரை அவருடைய

கிராமத்திலேயே முடக்கிப் போட்டனர். தம்முடைய குடும்ப வறுமைக்காக தினக்கூலியாக மாறினார். ஆனாலும் தம்முடைய போராட்டத்தைக் கைவிடவில்லை. அரசு கொடுக்கும் ஊக்கத்தொகை தேவையில்லை, தனக்குத் தன்னை நிலைநாட்டிக் கொள்ள, தன்னுடைய விளையாட்டின் மீதான மதிப்பிற்கும், சாதிக்கவேண்டும் என்ற துடிப்பிற்கும், அரசுப்பணி வேண்டும் என்று தொடர்ந்து அரசாங்க வேலைக்காகப் போராடிக்கொண்டு இருந்தார். தம் தொடர் போராட்டத்தின் வெற்றியாக தமிழக அரசு விளையாட்டு மேம்பாட்டுத் திட்டத்தின் சார்பில் நேரு விளையாட்டு அரங்கில் தடகளப் பயிற்சி நிபுணராக நிரந்தரப் பணியில் சேர்ந்தார். தம்முடைய நம்பிக்கை மற்றும் தளராத முயற்சியினாலேதான், சாந்தியால் இன்று பல தடைகளையும் உடைத்துச் சாதிக்கமுடிந்தது.



அதேபோல் தம்முடைய ஏழ்மையையும், தான் ஒரு மாற்றுத் திறனாளி என்ற எண்ணத்தையும் புறந்தள்ளி சாதித்தவர் சேலம்மாவட்டம், வடக்கம்பட்டியைச் சேர்ந்த மாரியப்பன் தங்கவேலு அவர்கள். பள்ளிக்கு செல்லும்போது அறியாப்பருவத்தில் தன்னுடைய ஐந்தாம் அகவையில் பேருந்து கால்கள் மீதேறி, தன்னுடைய கால்களை இழந்தவர். மேலும் தந்தை இளம் வயதிலேயே மறைந்துவிட தன்தாயால் வளர்க்கப்பட்டார். மிகவும் சிரமத்துக்கிடையேயும், விளையாட்டின் மீதான ஆர்வமும், சுறுசுறுப்பும், குறையவில்லை. இவரது ஆசிரியர் கவனம் இவர் பக்கம் திரும்பி மாரியப்பனை ஊக்கப்படுத்தினார். மேலும் ஆசிரியர் இராசேந்திரன் அவர்கள் உயரம் தாண்டுதலில் கவனம் செலுத்துமாறு அறிவுரையும் கூறினார். அவ்வாறே பலநிலைகளில் வெற்றிபெற்று, மாவட்ட அளவில் போட்டிகளில் பங்குகொண்டார். சிறந்த பயிற்சியாளர்களிடம் பயிற்சிபெற்று பாரா ஒலிம்பிக் போட்டிகளில் பங்குபெறும் அளவு தகுதிபெற்றார்.

மேலும் இரியோடிசெனீரோவில், 2016ல் நடைபெற்ற பாரா ஒலிம்பிக் போட்டியில், உயரம் தாண்டுதலில், தங்கப் பதக்கத்தையும் வென்றார். மேலும் தம்முடைய செயல்திறத்தால் நம்பிக்கை நாயகனாக வலம்வந்து விருதுகளையும் பெற்றார். இந்திய அரசுகடந்த 2017ஆம் ஆண்டு, சனவரி 25 ஆம்நாள் அவருக்கு உயரிய பத்மஸ்ரீ விருதை வழங்கி கவுரவித்தது. மற்றும் 2020ஆம் ஆண்டு, ஆகஸ்ட்மாதம், இராசீவ்காந்தி கேல்இரத்னா விருது வழங்கப்பட்டது. ஆனந்த விகடன் வழங்கிய டாப்டென் விருது 2016இல் கிடைத்தது. பலவிருதுகளையும், ஊக்கத் தொகைகளையும் பெற்றார். இவரைக் கவுரவிக்கும் விதமாக மைஸ்டாம்ப் திட்டத்தின்கீழ் சேலம் தபால்துறை

அஞ்சல்தலை வெளியிட்டது. இவ்வாறு தம்முடைய விடாமுயற்சியினாலும், தன்னம்பிக்கையாலும், உயரம் தாண்டுதல் போல, தம்வாழ்க்கையின் உயரத்திற்கே சென்றார்.

எனவே நாமும் நமது தடைகளைக் கடந்து, வெற்றிகளைக் குவிக்க ஆக்கம் கொள்ளவேண்டும். வலிமையான உறுதிகொண்டு முயற்சி செய்தால் சாந்தியைப் போலவும், மாரியப்பனைப் போலவும் உறுதியாக வெற்றி காணுவோம். நம்முடைய விடாமுயற்சி உறுதியாக நமக்குப் பெருமைசேர்க்கும் என்பதில் நமக்கு ஐயமே வேண்டாம். அதைத்தான் வள்ளுவர் இக்குறளில் அருமையாகக் கூறியுள்ளார்.

குறள்எண்:611:ஆள்வினையுடைமை.

அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்



கற்க கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக.

# குறள் விருந்து

திங்கள் தோறும் வெளி வரும் சிறுவர் மின்னிதழ்

மின்னிதழ் 7
ஆவணி 8, 2052 | 24-8-2021
உலகத் திருக்குறள் இணையக் கல்விக்கழகத்தால் வெளியிடப்படும் இலவச இணைய இதழ்


## திருக்குறளின் பெருமை



தித்திக்கும் தமிழிலே முத்து முத்தாய்
எண்ணம் தந்தவர் திருவள்ளுவர்-தேன் போலே
கத்தும் கடல் பிறந்த காலத்திலே பிறந்தும்
கன்னிப் பருவத்தோடு இன்னும் இருந்து வரும் (தித்திக்கும்)

பஞ்சம் வராமலே பகைமை இல்லாமலே
பசியும் பிணியும் பரவ விடாமலே
வஞ்சமும் சூழ்ச்சியும் வளரவிடாமலே
வாட்டம் இன்றியே நாட்டினில் அனைவரை
வாழ வைத்திடும் ஆட்சி நிலை பெறவே (தித்திக்கும்)

உழைக்காதவன் வாழ்வில் முன்னேற்றம் கிடையாது
உலகினில் புகழ் இன்றி எதுவுமே நிலைக்காது
உயிரினும் மேலாம் மனிதர்க்குத் தன்மானம்
அதுவே பெருமை தருமென
அருமையாம் குறளிலே அமுதமெனவே...(தித்திக்கும்)

உவமைக்கவிஞர் சுரதா
(23-11-1921-20—6-2006)

---

*பொறுப்பாசிரியர்: திருமதி.தாமரை சீனிவாசராவ்*

---

# சிறுவர் குறள் நெறிக் கதை
# பெருமை பேசிய பனிக்கட்டி

-கவிஞர் நாரா.நாச்சியப்பன்



*நாரா. நாச்சியப்பன். பொன்னி என்ற இதழில் துணையாசிரியராகப் பணியாற்றியவர். ஐங்கரன் எனும் கையெழுத்து ஏட்டினை நடத்தியவர். புகழ்பூத்த பாரதிதாசன் மரபுப் பாவலர். கவிதை நூல்கள், காப்பியம், நாடகம், மொழிபெயர்ப்பு இலக்கியம், சிறுவர்க்கான கதைகள், கட்டுரைகள் எனப் பல்வேறு வகைமைகளில் நூற்றுக் கணக்கிலெழுதியுள்ளார். இந்தச் சிறுகதை தமிழாலயம் வெளியிட்ட சிறுவர்க்கான சிறுகதைத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளது.*

ஒரு நாள் காற்று வலுவாக வீசியது. பல மரங்கள் சாய்ந்து விட்டன. ஊரெங்கும் ஒரே புழுதியாக இருந்தது. கொடிமரங்கள் அறுந்து போயின. மக்கள், பறவைகள், விலங்குகள் யாவும் வெளியில் நடமாட முடியாமல் தவித்தன.

காற்று நிமிர்ந்து பார்த்தது. 'உலகத்தில் நான் தான் பெரியவன். எல்லாரும் எனக்குப் பணிந்து நடக்கவேண்டும்' என்று கூவியது.

ஆ! ஆ! ஆ!

திடீரென்று ஒரு சிரிப்பொலி கேட்டது.

'யார் சிரிப்பது?' என்று காற்று சினத்துடன் கேட்டது.

ஆஆ! ஆஆ! ஆஆ! என்று அந்தச் சிரிப்பொலி பெரிதாகியது.

'என்னைப் பழித்துச் சிரிப்பவன் எவன்? எதிரில் வா! பார்க்கிறேன்!'' என்று கூச்சலிட்டது காற்று.

வெள்ளை வெளேரென்று பனிக்கட்டி அதன் எதிரில் மலை போல் வந்து நின்றது.

'ஏ காற்றே! என்ன சொன்னாய்? உலகில் நீதான் வலுவானவனா? என்ன நெஞ்சுரம் உனக்கு?என்னைப்பற்றி உனக்குத் தெரியாதா? உன்னைக் காட்டிலும் நான்தான் வலுவானவன்! இனிமேல் நீ வலுவானவன் என்ற எண்ணத்தையே விட்டு விடு!' என்று கூறி நிமிர்ந்து நின்றது பனிக்கட்டி,

'இல்லை, நான்தான் வலுவானவன்., நீ என்முன் மண்டியிட்டு வணங்கு. இல்லாவிட்டால் சும்மாவிட மாட்டேன்!' என்று சீறியது காற்று,

'என்ன? நான் உன்முன் மண்டியிடுவதா? மூடக் காற்றே! இப்பொழுது நான் கூறுகிறேன் கேள். பேசாமல் என் காலடியில் விழுந்து வணங்கு, உன்னை மன்னித்துவிடுகிறேன். இனிமேல் தற்பெருமை பேசாதே!' என்று கூறியது பனிக்கட்டி!

'நான் தான் பெரியவன்! நீ தான் என்னை வணங்க வேண்டும்' என்றது காற்று.

'இல்லையில்லை. நீ தான் என்னை வணங்க வேண்டும். பேசாமல் அடங்கிப் போ' என்றது பனிக்கட்டி.

இப்படி நெடுநேரம் இரண்டும் 'நான் தான் வலுவானவன்.' 'நான் தான் பெரியவன்' என்று மாறி மாறிக் கூறிக் கொண்டிருந்தன.

கடைசியில் காற்று சொன்னது!'நாம் வாதாடிக் கொண்டிருப்பதல் பயனில்லை. பகலவனிடம் போவோம், அவன் யார் பெரியவர்--வலுவானவர் என்று தீர்ப்புக் கூறட்டும்' என்று கூறியது.

பனிக்கட்டியும் ஒப்புக் கொள்ளவே இரண்டும் பகலவனிடம் சென்றன.

'கதிரவனே! உண்மையைச் சொல். நான்தானே வலுவானவன்?' என்று கேட்டது காற்று,

'பகலவனே, காற்றைக் காட்டிலும் நான்தான் வலுவானவன். இந்த உண்மையை நீ காற்றுக்கு எடுத்துக் கூறு' என்று கூறியது பனிக்கட்டி,

பகலவன் அவற்றைப் பார்த்துச் சிரித்தது.

'ஏன் வீண் சண்டை போடுகிறீர்கள்... அசையும் தன்மையை வைத்துப் பார்த்தால் காற்றுத் தான் வலுவானது. அசையாத தன்மையை வைத்துப் பார்த்தால் பனிக்கட்டி தான் வலுவானது. உண்மையிப்படி இருக்க நீங்கள் ஏன் ஒயாமல் சண்டை போடுகிறீர்கள்?' என்று கேட்டது கதிரவன்.

'கதிரவனே நீ சொல்வது சரியல்ல,அசையாத பனிக்கட்டியை நான் அசைத்து விடுவேன்' என்றது காற்று.

'முடியாது! முடியவே முடியாது!' என்று கூறியது பனிக்கட்டி, கதிரவன் முன்னிலையிலேயே அவை மீண்டும் சச்சரவு செய்யத் தொடங்கின.

'உங்களுக்குள் ஏன் வீண் சண்டை? ஒரு போட்டி வைத்துப் பார்த்து விடலாமே!' என்று கூறியது பகலவன்;

'ஆம் ஆம்! போட்டி வைக்கலாம்' என்று இரண்டும் ஒப்புக் கொண்டன.

பகலவன் போட்டிக்கு விதி வகுத்தது.

பனிக்கட்டி ஓரிடத்தில் அசையாமல் நிற்க வேண்டும். காற்று தன் வலுவைக் கொண்டு அதை அசைக்க வேண்டும்.அசைத்து விட்டால் காற்றுத்தான் வலுவானது என்று முடிவு செய்யலாம். அசைக்க முடியாவிட்டால் பனிக்கட்டிதான் வலுவானது என்று தெரிந்து கொள்ளலாம்.

இந்தப் போட்டிக்கு இரண்டும் ஒப்புக் கொண்டன.

பனிக்கட்டி ஒரிடத்தில் மலை போல வளர்ந்து நின்றது. காற்று அதை நோக்கி வீசியது. ஓஒ வென்ற பேரிரைச்சலோடு காற்று மோதியது. காற்று வீச வீச பனிக்கட்டி இறுகியதே தவிர அசையவேயில்லை. காற்று தன் வலுவெல்லாம் சேர்த்து வீசியது. தன் ஆற்றலெல்லாம் கூட்டி ஆர்ப்பரித்தது. காலை ஆறு மணி முதல் மாலை ஆறு மணிவரை தொடர்ந்து மோதியது காற்று. பனிக்கட்டி சிறிது கூட அசையயவேயில்லை.

'பனிக்கட்டிதான் வலுவானது' என்று தீர்ப்புக் கூறிவிட்டுக் கதிரவன் மேற்குத் திசையில் மறைந்து விட்டது.

காற்று மனம் குன்றி ஒடுங்கப்போய் விட்டது. அன்று இரவு முழுவதும் வெளியில் தலைகாட்டாமல் ஒடுங்கிப் போய் விட்டது.

மறுநாள் காலையில் கீழ்த்திசையில் தோன்றிய கதிரவன், பனிக்கட்டி போட்டியில் வெற்றி பெற்றதற்காகப் பாராட்டுத் தெரிவித்தது.

'நான் வலுவானவன் என்பதை நீ தெரிந்து கொண்டாய் அல்லவா? இனி நீயும் எனக்கு அடங்கித்தான் நடக்க வேண்டும்' என்று பகலவனைப் பார்த்துக் கூறியது பனிக்கட்டி.

கதிரவன் மனத்துக்குள் சிரித்துக் கொண்டது. வீண் பெருமை பாராட்டும் பனிக்கட்டிக்குச் சரியான சூடு கொடுக்க வேண்டும் என்று திட்டமிட்டது. தன் கதிர்களைப் பனிக்கட்டியை நோக்கி நீட்டி விட்டது, நேரம் ஆக ஆகக் கதிர்கள் பனிக்கட்டியின் மீது பட்டு அதைத் துளைத்தன. கதிர்கள் படப் படப் பனிக்கட்டி கரைந்தது. மேலும் மேலும் கரைந்தது. கரைந்து கொண்டேயிருந்தது, கரைந்து கரைந்து மலைபோல நின்ற பனிக்கட்டி இறுதியில் கூழாங்கல்போல ஆகி விட்டது.

அப்போது தான் பனிக் கட்டிக்கு அறிவு வந்தது.

கதிரவனின் காலில்விழுந்து வணங்கியது.

'கதிரவனே! மன்னித்துவிடு, என்னை ஒரேயடியாகக் கரைத்து ஒழித்துவிடாதே! உலகில் நானும் வாழ இடங் கொடு' என்று கெஞ்சிக் கதறியது.

கதிரவன் இரக்கங் காட்டியது. 'பனிக்கட்டியே கேள். இனி நீ வெறும் ஆர்ப்பாட்டம் செய்யாதே! உலகில் ஒவ்வொருவரும் ஒவ்வொரு வகையில் உயர்ந்தவர்கள். எல்லாருக்கும் மேலாக நான்தான் உயர்ந்தவன் என்ற எண்ணத்தைக் கைவிட்டுவிடு. வீண் சண்டைக்கு வந்ததனால் உன்னை ஒழித்துவிட நினைத்தேன். ஆனால், உன் அழுகையும், கெஞ்சலும் கண்டு மனம் இரங்குகிறேன். ஓர் ஆண்டில் நான்கு மாதம் மட்டும் நீ உலகில் நடமாட அனுமதி கொடுக்கிறேன். மீதி நாட்களில் இமயமலையின் மேல் போய்ப் படிந்து கொள். வெளியே தலைகாட்டாதே! உனக்கென்று ஒதுக்கப்பட்ட நான்கு மாதங்கள் பனிக்காலம் என்ற பெயரால் அமையும். அந்தக் காலத்தில் மட்டும் நீ உரிமையோடு உலகில் ஆட்சி செலுத்தலாம். மீதி நாட்களில் நீ அடங்கித்தான் கிடக்க வேண்டும். என்னையும் காற்றையும் எதிர்த்ததற்காக உனக்கு எட்டு மாதச் சிறைத்தண்டனை' என்று கூறிய கதிரவன் உச்சி நோக்கிச் சென்றது.

அதைப் பணிந்து வணங்கிவிட்டுப் பனிக்கட்டி இமயமலைக்குப் புறப்பட்டது. அன்று முதல் அது வீண் சண்டைக்குப் போவதை விட்டுவிட்டது. தான் தான் உயர்ந்தவன் என்ற தற்பெருமையையும் விட்டு விட்டது.

பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.--குறள் 978:

*பெருமைப் பண்பு எக்காலத்திலும் பணிந்து நடக்கும், ஆனால் சிறுமையோ தன்னைத் தானே வியந்து பாராட்டிக் கொள்ளும்.(மு.வ உரை.)*

*பண்புடைய பெரியோர் எல்லோரிடமும் எப்பொழுதும் பணிவுடன் பழகுவார்கள்; பண்பு இல்லாத சிறியோர், தம்மைத் தாமே புகழ்ந்து கொண்டு இறுமாந்து கிடப்பார்கள். (கலைஞர் உரை.)*

# கல்வி

## -கவிஞர். த. துரைசிங்கம்

---

*கல்விப் பணிப்பாளர் (ஓய்வு) சிறீலங்கா புத்தகசாலை,234, காங்கேசன்துறை வீதி, யாழ்ப்பாணம். ['சிறுவர் கட்டுரைகள்' : ஐந்தாம், ஆறாம் வகுப்பில் கற்போர்க்கும், கல்வியமைச்சு நடத்தும் புலமைப்பரிசிற் பரீட்சை, தெரிவு செய்யப்பெற்ற/ பாடசாலைகளிற் சேர்வதற்கான பிரவேசப் பரீட்சை ஆகியவற்றுக்குத் தோன்றுவோர்க்கும் பயன்தரும் வகையில் ஆக்கப்பெற்ற கட்டுரைத் தொகுப்பு]*

---

கல்வி என்பது மனிதனுக்கு அறிவூட்டும் ஒளி விளக்குப் போன்றது. மனிதரிடத்துள்ள அறியாமையைப் போக்கி நல்வழி காட்டவல்லது. கற்றறிந்தவனே கண்ணுடையவனாகக் கருதப்படுவான். கல்வி அறிவில்லாதவன் கண்கள் இருந்தும் கண்கள் அற்றவன் எனக் கருதப்படுவான்.

'கண்ணுடையரென்பர் கற்றோர் முகத்திரண்டு புண்ணுடையர் கல்லாதவர்' என்கிறது திருக்குறள். எனவே மனிதராகப் பிறந்த ஒவ்வொருவரும் கற்க வேண்டியவற்றைக் கற்று கற்ற நெறிப்படி ஒழுகுதல் வேண்டும். இதனையே திருவள்ளுவரும்,

'கற்க கசடறக் கற்பவை கற்றபின்

நிற்க அதற்குத் தக' என்கிறார். கற்கவேண்டியவற்றைக் கற்கும் பருவத்திலேயே நாம் கற்க வேண்டும்.

உலகில் இருவகைச் செல்வங்கள் உள்ளன. ஒன்று கல்விச் செல்வம் மற்றையது பொருட்செல்வம். பொருட்செல்வம் பிறருக்குக் கொடுக்குந் தோறும் குறைவடையும். வெள்ளத்தால், நெருப்பால் அழியக் கூடியது. கள்வரால் கவரக்கூடியது. எவ்வளவு பொருட் செல்வத்தை நாம் தேடி வைத்தாலும் அவை நிலைப்பதில்லை. ஆனால் கல்விச் செல்வமானது நிலையானது. அழியாதது. கல்விச் செல்வமானது பிறருக்குக் கொடுக்குந்தோறும் பெருகிக் கொண்டே செல்லும்.

கற்றோருக்குச் சென்ற இடமெல்லாம் சிறப்புண்டு. ஒருவனுக்குக் கல்வி அழகே உண்மையான அழகாகும். கல்வி அழகைப் பெறுவதற்கு நாம் முயற்சி செய்யவேண்டும். கல்வி அறிவாலேயே நாமும், நாடும் முன்னேற முடியும். இதனை நன்குணர்ந்து கல்விச் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள நாம் ஒவ்வொருவரும் முயற்சி செய்தல் வேண்டும்.

தேடி நிதம் பூக்களில்
தேன் சேர்க்கும் தேனீபோல்
தேர்ந்து நல்ல கல்வியைத்
தேடி நாமும் கற்போமே.

# நல்லோர் இணக்கம்

-திருமதி.தாமரைசீனிவாசராவ்



நல்ல எண்ணங்களும் செயல்களுமே நமக்குத் துணையாக இருக்கும்.அதுவே நம் வாழ்க்கையின் வெற்றிப்பாதைக்கு வழிநடத்தும். தீயஎண்ணங்களும் செய்கைகளும் நமக்கு மிகவும் ஆபத்தையே விளைவிக்கும். பகைவர்களையே சம்பாதித்துக் கொடுக்கும். தீயஎண்ணம் கொள்வதால் ஒருபோதும் நாம் நல்வழியில் சிந்திக்கமுடியாது.

யாரைப் பழிவாங்கலாம், யாருக்குத் துரோகம் இழைக்கலாம் என்று பொறாமைக்குணத்துடன் சுற்றித் திரிந்தால் ,அது உள்ளத்திற்கும், உடலுக்கும் சேர்ந்தே தீங்காகிவிடும். தீயவற்றை நமக்குள் ஏற்படுத்தும் தீய எண்ணங்களைக் கைவிடுதலே நல்லதாகும்.

வளவனும், மகிழனும் இணைபிரியா நண்பர்களாக இருந்தனர். எப்போதும் தமக்குள் எவ்வித வேறுபாடும் இல்லாமல் பழகிவந்தனர். பள்ளிப்பருவம் முதல் ஒன்றாகவே வளர்ந்ததால் அவர்களை உடன்பிறப்புகள் என்றுகூட சிலர் நினைத்ததுண்டு. பள்ளி முடித்து,கல்லூரிக்காலம் வந்தது. விருப்பப்பாடத் தேர்வாக இருவரும் வெவ்வேறு வகுப்பிற்குள் நுழையும் சூழல் ஏற்பட்டது.

காலம் மாறியது.வளவனின் நட்புவட்டம் விரிவடைந்து ,அவன் புதிய நண்பர்களைத் தேர்ந்தெடுக்க ஆரம்பித்தான். அவ்வாறு அவர்களோடு பழகும்போது ,சில தகாத பழக்கத்திற்கும் ஆளானான். அவனைக் கண்டு கவலைகொண்ட மகிழன், "டேய் வளவா இதெல்லாம் நமக்கு வேண்டாண்டா. .நாம எப்பவும் போல இயல்பா இருப்போம். நீ எல்லோரோடையும் பழகு, நான் வேணாண்னு சொல்லல .ஆனா நீ பழகுற ஆட்களும் சரி, அவங்க பழக்கவழக்கங்களும் சரி, எதுவும் சரியில்ல. நீ ஏதாவது வம்பு,தும்பில் மாட்டிக்கிட்டா அப்பா, அம்மா ரொம்ப வேதனைப்படுவாங்க. வீட்டில் இருக்கும் தங்கையைப் பற்றி யோசிச்சுப்பாரு. நீதானே அவளுக்கு வழிகாட்டியா இருக்கணும்" என்று புலம்பித் தீர்த்தான்.

ஆனால் வளவனுக்கோ சிறிதும் அவன் பேசுவதில் நாட்டமில்லை.

"எல்லாம் எனக்குத் தெரியும் போடா.... நான் ஒண்ணும் பிரச்சனையில மாட்டமாட்டேன். நீ போய் உன் வேலையப் பாரு என்று எடுத்து எறிந்தாற்போல் பேசினான் .மிகவும் சங்கடப்பட்டு ,அவன் நண்பன் தீயோர் கையில் சிக்கியதை எண்ணி வருந்திக்கொண்டே சென்றுவிட்டான். நாளாக, நாளாக படிப்பிலும் கவனம் சிதறி, பெற்றோரைக் கல்லூரிக்கு வந்து கல்லூரி முதல்வரிடம் களங்கப்படுமளவிற்கு, புகார்களைத் தன் மேல் அடுக்குமளவுக்கு, பெயர்கெட்டுப்போனான். கல்லூரி நிருவாகமும் பலமுறை எச்சரிக்கை விடுத்தது. தீய நண்பர்களின் தொடர்பால், அவன் தகாத செயல்களைச் சுட்டிக்காட்டி, கல்லூரி நிருவாகம் தண்டனையாக, வளவனைக் கல்லூரி விட்டே நீக்கியது. மிகவும் துயருற்ற அவன் பெற்றோர் செய்வதறியாமல் வீட்டிற்கும் அழைத்துவந்துவிட்டனர். ஏதோ பிள்ளயாக வேலை செய்தும்

பிழைத்துக்கொள்ளட்டும் என்று எண்ணினர். ஆனால் தீயோர் நட்பு அவனை வேண்டாத வேலைகளில் ஈடுபடுத்தி , காவல்நிலையம் கொண்டுசென்றது. காலங்கள் செல்லச்செல்ல குற்றங்கள் பெருகி , நிரந்தரக் கைதியாகவே மாறினான்.

ஆனால் அதே சிறைவளாகத்தில் படித்து முடித்து, உயரிய பதவியில் தன் நண்பன் மகிழனைக் காண்பான் என்று அவன் சற்றேனும் நினைத்திருக்கமாட்டான். அதிர்ச்சியிலும், குற்றஉணர்ச்சியிலும் ,தன் தோள் கொடுத்த நண்பனை எண்ணி வெட்கித் தலைக்குனிந்தான். எப்படியெல்லாம் தீயோர் நட்பு தன்னைக் கொண்டு வந்துவிட்டது என்று எண்ணி எண்ணி வருந்தினான். ஆனால் என்னசெய்வது? காலம் கைமீறிச் சென்றுவிட்டது. தன்நிலையை எண்ணி வருந்திய அவன், தாழ்வு மனப்பான்மையால் தவித்துக்கொண்டிருந்தான். ஆனால் தன் பழையநட்பை மறக்காமல், எப்படியாவது இத் தருணத்தைப் பயன்படுத்தி, தன் நண்பனை மீட்டுவிட முயற்சி செய்தான் மகிழன்.

சிறைச்சாலையில் மறுசீரமைப்புமுகாமில், ஆசிரியர்களால் வளவன் கணிணிப்படிப்பிற்குத் தேர்வானான். தன் நண்பனுடைய ஒத்துழைப்பாலும், மீண்டும் திருந்தி வாழவேண்டும் என்ற விடாமுயற்சியாலும் ,படித்துத் தேர்வானான். நன்னடத்தையின் காரணமாக விடுதலையும் முன்னமே பெற்றான் . தனக்கான வேலையையும் பெற்றான். தன்னுடைய நம்பிக்கைக்கு உரித்தான நண்பனை எண்ணி, அவன் தக்க சமயத்தில் செய்த உதவியையும் எண்ணி பெருமகிழ்ச்சி அடைந்தான்.

நல்லவர்களோடு இணங்கி இருத்தலே நம் வாழ்விற்கு நாம் செய்யும் நன்மையாகும், நல்ல மனிதர்களின் துணையே நம் வாழ்வின் வெற்றிக்குக் காரணமாக அமையும் . தீயவர்களை நாம் விலக்கி வைக்க வேண்டும் . இல்லையெனில் அது நமக்கு அழிவைத் தந்துவிடும். நல்லாரோடு இணங்கி இருத்தலே என்றென்றும் பெருமையாகும். இதைத்தான் திருவள்ளுவர் இக்குறளில் அழகாக விளக்கிக் கூறியுள்ளார்.

நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல் –குறள் 460 (சிற்றினம் சேராமை)